

திருவள்ளூர்க்கு அருகில் உள்ள திருப்பாசூர் என்னும் தேவாரப் பாடல் பெற்ற திருக்கோயிலின் அழகிய தோற்றம்.



முகப்பு :

சென்னை — திருவல்லிக்கேணி
அருள்மிகு
பார்த்தசாரதி சுவாமி கோயிலின்
உற்சவர் திருவுருவம்

# திருக்கோயில்

மாலை : 20 | காளயுக்தி ஆண்டு-புரட்டாசித் திங்கள்—செப்டம்பர்-1978 | மணி : 12

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

**ஆணையர் அவர்கள்,**
**அறநிலைய ஆட்சித்துறை,**
**சென்னை — 600 034**

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப்பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. **15—00** உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங்களுக்கு, ஒரு இதழ் ரூ. **1—25** வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் ''சந்தாதாரர்'' ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொருவரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் *[PINCODE]* எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறையாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற்பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. **9—60** ஆகின்றது. ஆதலால் வெளிநாட்டுச் சந்தா, ரூ. **20—00**-ல் இருந்து ரூ. **25—00** ஆக ஜனவரி **1978** முதல் மாற்றி அமைக்கப் பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப்போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்



ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

**"என் கடன் பணி செய்து கிடப்பதே"**

# வரவேற்புப் பாராட்டியல் வாழ்த்துப்பா

[ந. ரா. முருகவேள், M.A., M.O.L.]

[''அருள்மொழியரசு'', ''அமிழ்தமொழிப் பெருநாவலர்'', ''திருப்பணி வேந்தர்'', ''திருப்புகழ் அமிர்தம் ஆசிரியர்'' திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்கள், இங்கிலாந்து நாட்டில், இலண்டன் மாநகரில், ஆரிங்டன் ஸ்கொயர் என்னும் இடத்திற் புதிதாகக் கட்டப் பெற்றுவரும் திரு முருகன் திருக்கோயிலில் நடைபெறவுள்ள திருக்குட நன்னீராட்டு விழாவிற்காக, இலண்டன் மாநகரில் வாழ் தமிழ் மக்களால் விரும்பி வேண்டி அழைக்கப்பெற்றுச் சென்று, செந்தமிழ்ப் பெருந் தெய்வமாம் திருமுருகனின் புகழ் பரப்பிப் போந்தருளியமை குறித்து மகிழ்ந்து, பணிந்து, போற்றி, வழங்கிய பாடல்கள், இங்கு வெளியிடப் பெறுகின்றன (11-8-78 ]. —ஆசிரியர். ]

சைவநெறிப் பெருஞ்சான்றோய்! தமிழ்மொழிநற் பெரும்புலவ! தகைமை ஓங்கும்
செவ்வியநற் பெருங்குணத்தோய்! திருமுருக கிருபானந்த வாரிச் செம்மால்!
திவ்வியசீர்த் திருப்புகழ்நல் அமிழ்தஇதழ் ஆசிரிய! சிறப்பின் மிக்கோய்!
ஐய!நினது அரும்பெருஞ்சீர், அளவில்பெரும் பணிகள்எலாம் அளத்தற் காமோ? (1)

அருமைமிகு பெருந்தகையோய்! அரியசைவ நெறிவளர்க்கும் அறிஞர் ஏறே!
பெருமைமிகும் அருண்மொழிநற் பேரரசே! திருப்பணிகள் பேணும் வேந்தே!
தருமநெறி தழைப்பிப்போய்! சார்ந்தோர்கள் தமைஎல்லாம் தாங்கும் சான்றோய்!
திருமுருக கிருபானந்த வாரிஎனும் செம்மால்!நும் சிறப்பென் சொல்கேம்? (2)

செந்தமிழ்நற் பெருமொழியும், சித்தாந்தச் செந்நெறியும், செழித்தே ஓங்க
வந்தஒரு பெருந்தோன்றல்! வடமொழிதென் மொழிக்கலைகள் வாய்ப்பக் கற்றோய்!
அந்தமிலாப் பெருஞ்சிறப்பின் அருளின்பப் பெருங்கடலே! அறிஞர் ஏறே!
சந்தமுறு சொன்மாரி தகப்பொழிந்து சமயநெறி தழைக்கச் செய்வோய்! (3)

கேட்போரைப் பிணிப்பதுடன், கேளார்க்கும் வேட்கைமிகக், கிளர்ச்சி ஊக்கம்
ஊட்டாநின்று, அறிவுவிருந்து உதவும்உயர் நாவலவ! ஒப்பில் சான்றோய்!
சேட்சிமையாம் மலாய்சிலோன் பாரிஸ்லண்டன் முதலாம் தேயத் தோடு,
மாட்சிமிகத் தமிழ்வழங்கும் வளாகமெலாம், புகழ்பொறித்த வள்ளால் வாழி! (4)

சொல்லருஞ்சீர் ஞானியார், மறைமலையார், திரு. வி. க. முதலாச் சொல்லும்
நல்லறிஞர் பற்பலர்தாம், நன்குமிகக் கலந்தொன்றி நயந்து நின்று,
பல்வகையில் தமிழ்ச்சைவப் பணிபுரிந்தார்! அவர்வழியிற் பணிகள் ஆற்றும்
எல்லையில்சீர் அருளின்பப் பெருங்கடல்,நீர் தமிழ்சிவம்போல் இனிதே வாழ்க! (5)

''ஞாலமெலாம் இறைநெறியே நனிபரவல் வேண்டும்''என நயப்புற் றன்பால்,
சீலமிகும் உயர்காழித் திருஞான சம்பந்தர் தெரித்துச் சென்றார்!
சாலமிக அவர்விருப்பம் தக்காங்கு நிறைவேறச், சான்றோய் நீதான்
ஏலமிகப் பாரிஸ்லண்டன் ஏகிவந்தாய்! நெடுங்காலம் இனிதே வாழ்க! (6)

முருகனடி இணைமறவா மூதறிஞ! முத்தமிழின் நலங்கள் எல்லாம்
பெருகமிகப் பேசவல்லோய்! தினம்தினம்பல் ஆயிரவர் பெரிதும் கேட்டே,
உருகிமகிழ்ந் துளம்திருந்தி உய்யும்வணம் செய்துவரும் உயர்ந்தோய்! நின்போல்
திருகலில்சீர்க் கடவுள்நெறி திசையனைத்தும் பரவும்வகை செய்வார் உண்டோ? (7)

அருணகிரி நாதர்அருள் பெறும்வயலூர், இராமலிங்க அடிகள் வாழ்ந்து
கருணைபொழிந் தருள்வடலூர், காங்கேயப் பெருநல்லூர், கவின்மை லாப்பூர்,
அருள்நலஞ்சேர் ஆனைக்கா, ஆகியபல் தலங்களிலும் அருமை வாய்ந்து,
பெருகுநல்ல பணிகள்செய்த பெருந்தகையோய்! நீடினிது பிறங்கி வாழ்க! (8)

அறங்கரையும் நாவினராம் அந்தண,நற் பெரும்புலமை அரச, எங்கள்
திறம்தெரிந்தும் பேரருளாற் சிறியோமை ஏற்றருளும் வணிக, நல்லோய்,
மறம்பெருகெம் மனவயலில் 'நுகம்இன்றி விளாக்கைத்து' மகிழ்வே ளாள,
சிறந்துயர்ந்த கணக்காய, செவ்வியசொல் வலைவேட, செம்மைச் சான்றோய்! *(9)*

கலைநலத்தாற் சம்பந்தர், கனிந்தஅன்பில் மணிமொழியார், கருதும் தொண்டின்
நிலைநலத்தால் நாவரசர், நெறிவளர்ப்பில் சுந்தரனார், நெஞ்சில் வீண்பற்று
இலநலத்தால் பட்டினத்தார், இரக்கத்தால் இராமலிங்கர், என்று இயம்பப்
பலநலத்தாற் சிறந்தொளிர்வோய்! பண்புயர்நின் நலங்களெல்லாம் பகர்தற் காமோ? *(10)*

ஒப்புஆரும் இல்லாத சீர்த்தி மிக்க
உயர்ந்தநல்ல இராமலிங்க அடிக ளார்தாம்,
''எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்''
தப்பாமல் அருள்க!என்றே சாற்றிக் கேட்டும்,
தகஅங்ஙன் எங்கணுமே சென்றார் இல்லை!
அப்பேறு நீர்பெற்றீர்! இலண்டன் பாரிஸ்
அடைந்து, தமிழ் பரப்பிவந்தீர்! வாழ்திர் ஐய! *(11)*

எத்தனையோ செந்தமிழ்நற் சைவச் சான்றோர்
இருந்தார்கள் என்றாலும், அவர்கள் எல்லாம்
இத்தமிழ்நாட் டூர்கள்சில கண்டார் அன்றி,
ஏனைப்பலவும் காணகில்லார்; இலண்டன் பாரிஸ்
வித்தகமாய்ச் சென்று,விரி வுரைகள் ஆற்றி,
வியன்முருகன் தமிழ்பரப்பிப் போந்தீர்! நும்போல்
உத்தமநற் பெருஞ்சான்றோர் ஒருவர்க் காணோம்!
உயர்ந்தநும தரும்பணிகள் ஓங்கி வாழ்க! *(12)*

அருள்மொழி யரசே! அமிழ்தச்சொல் வேந்தே!
ஐய!நீர் பாரிஸ்லண்டன் நகர்கள்,
தெருள்மொழி யாம்நம் செந்தமிழ் பரப்பச்
சென்றுவந் தீர்என்பர்! அவர்சொல்
பொருள்மொழி யன்றாம்; ஒருவர்நீர் தாமோ,
போய்வந்தீர்? சேக்கிழார், கம்பர்,
மருள்மொழி யில்லா வள்ளுவர், நால்வர்,
வள்ளலார், எலாம்வந்தார் அலரோ? *(13)*

விழைதகு சிறப்பின் மிக்கீர்! கிருபா னந்த வியன்பெரியீர்!
பழுதிலாத் தெய்வ, மக்கட் பணிஎலாம் செய்வீர்! நீர்தாம்
விழுமிய பாரிஸ் லண்டன் நகரங்கள் மேவிப் போந்தீர்!
தொழுதுமை வாழ்த்து கின்றோம்! சூழ்ந்துபல் லாண்டு வாழ்க! *(14)*

தன்நேர் இல்லாத் திருமுருகன் தாள்கள் மறவாச் சான்றோய்! நீ
இந்நாள் பாரிஸ் லண்டன்நகர், ஏகி, முருகன் புகழ் வளர்த்தாய்!
நின்நாள் திங்கள் எனநீள்க! நீண்ட திங்கள் யாண்டாக!
பொன்நேர் யாண்டோ ஊழிபல பொலிய, வாழி நீடூழி! *(15)*

''நீடினிது வாழியரோ நெடுந்தகைநீ, செந்தில்எக்கர் நீள் மணல்போல்
கோடிபல ஆண்டுகள்தாம்'' எனக்கூறி மருதன் இளநாகர் என்னும்
பாடல்வல பெரும்புலவர் பாண்டியனை வாழ்த்திநின்றார்; பண்பார்ந் தோங்கித்
தேடருஞ்சீர்ப் பெருந்தகைநீ! திருமுருகன் திருவருளாற் சிறந்து வாழ்க! *(16)*

(வாழ்த்து)

வாழி முருகன்அருள்! வாழி அருணகிரி!
வாழிகிரு பானந்த வாரியார்!—வாழியரோ
பாரிஸ்லண்டன் வாழ்நல்ல பண்பார் தமிழ்மக்கள்,
சீரோடு மேன்மேற் சிறந்து!

---

# யார் உறவு?

'அருண்மொழியரசு' திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

சீருஞ் செல்வமும் பொருந்தி வாழ்கின்ற காலத்து சுகங்களை அனுபவித்திருந்து, செல்வந் தீர்ந்து வறுமையுற்ற காலத்து நம்மை விட்டு நீங்குபவர் உறவாகமாட்டார். வறுமையால் மெலிந்த காலத்தும் நம்முடன் இருந்து துக்கங் களை அனுபவிப்பவரே சிறந்த உறவு ; அவர் களே அன்புடையவர்கள். ஒரு குளத்தில் நீர் நிறைந்திருக்கிற வரை நீர்ப் பறவைகள் அக் குளத்தினிடம் சினேகமாக உறைகின்றன. நீர் வற்றி விட்டவுடனே அக்குளத்தை விட்டு அகன்று விடுகின்றன. அது போன்ற சுபாவ முடையார் உறவல்லர். அக்குளத்திலுள்ள ஆம்பலும் கொட்டியும் (ஓர்வகைக் கொடி), நெய்தலும் நீர் வற்றிய பிறகும் தாமும் அக் குளத்தை விட்டகலாமல் உலர்கின்றன. அது போன்ற சுபாவமுடையவரே உறவாவர்.

அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வா ருறவல்லர்—அக்குளத்திற்
கொட்டியு மாம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவா ருறவு.

—அவ்வைப் பிராட்டியார்

இடர் வந்த காலத்தில்தான் சிநேகிதர் பந்துக்கள் முதலியவர்களுடைய அன்பைத் திட்டமாக அளந்தறியலாம். நமக்கு வரும் இடர்தான், சினேகிதரையும் உறவின் முறை யாரையும் அளக்கும் அளவு கோல். ஆதலால் அக்கேட்டிலும் ஒரு பயன் உளது என்கின்றார் பொய்யில் புலவர்.

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்

இது சம்பந்தமாக தருமபுத்திரர் வினவ, பீஷ்மர் கூறிய உபாக்கியானத்தை எடுத்துக் காட்டுவோம்.

காசிராஜனுடைய தேயத்தில் ஒரு வேடன் விடமுள்ள பாணத்தை எடுத்துக் கொண்டு சேரி யிலிருந்து புறப்பட்டு மானைத் தேடிப் புறப் பட்டான். அங்கு ஒரு பெரிய வனத்தில். மான் கள் அருகிலிருக்கக் கண்டு மாமிசத்தில் இச்சை யுடைய அந்த வேடன் ஒரு மானையடிக்கக் குறி வைத்து கூரிய பாணத்தை விடுத்தான். தடுக்க முடியாத அந்தப் பாணம் குறி தவறின தால், அக்கானகத்துள் ஒரு பெரிய தழைத்த மரத்தின் மீது பாய்ந்தது. கொடிய விடந் தடவிய கணையினுல் மிக்க வேகத்துடன் குத்தப் பட்ட அம்மரம், காய்களும் இலைகளும் உதிர்ந்து உலர்ந்து போயின. வானளாவி வளர்ந்தோங்கி இருந்த அத்தருவானது அவ்வாறு உலர்ந்த போது அதன் பொந்துகளில் வெகு நாட்களாக வசித்திருந்த ஒரு கிளி, அம் மரத்தின் மேலுள்ள பற்றினுல் தன்னிருப்பிடத்தை விடவில்லை. நன்றி யறிவுள்ளதும் தருமத்தில் மனமுள்ளதுமாகிய அந்தக் கிளி, வெளியிற் சஞ்சரியாமலும் இரை யெடாமலும் களைப்புற்றும் குரல் தழுதழுத்தும் மரத்துடன் கூடவே உலர்ந்தது. மரஞ் செழிப் புற்றிருந்தபோது அதனிடஞ் சுகித்திருந்தது போல், அது உலர்ந்து துன்புறும்போது அதனை விட்டுப் பிரியாமல் தானுந் துன்புற்றிருந்தது. அந்தக் கிளியின் உயர்ந்த குணத்தை நன்கு நோக்குங்கள்.

சிறந்த குணமுள்ளதும், மேலான சுபாவ முள்ளதும், மனிதர்க்கு மேற்பட்ட நல்லொழுக் கமுடையதுமான அக் கிளி, அம் மரத்தைப் போலவே சுகத்தையும் துக்கத்தையும் அனுப வித்துக் கொண்டிருப்பதைக் கண்ட தேவேந் திரன், திகைப்படைந்தனன். அஃறிணை உயிர் களுக்கு இல்லாத கருணையை இந்தப் பறவை அடைந்திருப்பது எவ் வகை?'' என்று நினைத் தான். பிறகு ''இதில் ஆச்சரியப்பட வேண்டி யதில்லை. எல்லாப் பிராணிகளிலும், குணம் குற்றம் எல்லாம் காணப்படுகின்றன'' என்ற எண்ணமும், இந்திரனுக்கு உண்டாயிற்று. இங் ஙனமெண்ணிய இந்திரன், மானிட உருவெடுத்து ஓர் அந்தணன் வடிவமாகப் பூமியில் இறங்கி, அந்தப் பட்சியைப் பார்த்து ''ஓ பட்சிகளிற் சிறந்த கிளியே! உன் தாயாகிய தாக்ஷேயி உன்னுல் நல்ல சந்ததி உள்ளவளாக ஆகிருள். கிளியாகிய உன்னை நான் கேட்கிறேன். உலர்ந்து போன இந்த மரத்தை ஏன் விடா மலிருக்கிருய்?' என்று கேட்டான். இமையவர் தலைவனும் இந்திரனுல் இவ்வாறு கேட்கப்பட்ட கிளியா னது, அவனுக்குத் தலைவணங்கி நமஸ்காரம் புரிந்து, ''தேவ ராஜாவே! உனக்கு நல்வரவு ; நான் தவத்தினுல் உன்னைத் தெரிந்து கொண் டேன்'' என்று சொல்லிற்று. தேவேந்திரன் ''நன்று, நன்று'' என்று கூறி, என்ன அறிவு!' என்று மனத்திற் கொண்டாடினுன். இவ்வாறு சிறந்த செய்கையுள்ளதும் தருமத்தையே முக் கியமாகக் கொண்டதுமாகிய அந்தக் கிளியைப் பார்த்து, இந்திரன் தான் கேட்பது பாபமென்று தெரிந்திருந்தும் கேட்கத் தொடங்கினுன்.

''அறிவிற் சிறந்த பறவையே! இலைகளும் காய்கனிகளும் இன்றி உலர்ந்து பறவைகளுக்கு ஆதரவற்ற இம்மரத்தை ஏன் காக்கிருய் ? இது பெரிய வனமாயிருக்கிறதே ; இலைகளினுல் மூடப்பட்ட பொந்துகளும் சஞ்சரிக்கப் போது மான இடமுமுள்ள இன்னும் அழகான மரங்கள் அனேகம் இப்பெரிய வனத்திலிருக்கையில், முதிர்ச்சியடைந்து சக்தியற்று இரசம் வற்றி ஒளி குன்றிக் கெட்டுப்போன இந்நிலையற்ற மரத்தை, புத்தியினுல் ஆராய்ந்து பார்த்து விட்டு விடு'' என்றுன்.

அமரேசனுடைய இந்த வார்த்தையைக் கேட்டுத் தர்மாத்மாவான அந்தக் கிளி, மிகவும் நீண்ட பெரு மூச்செறிந்து துயரத்துடன் பின் வருமாறு சொல்லத் தொடங்கிற்று. ''மக பதியே! இந்திராணியின் கணவனே! யாவ ராலும் வெல்ல முடியாத தேவர்களிருக்கும் பொன்னுலகத்தில் வசிக்கும், நீ, நான் கூறுவ தைத் தெரிந்துகொள். அனேக நற்குணங்கள் பொருந்திய இம்மரத்தில் நான் பிறந்தேன் ; இளமைப் பருவத்தில் நன்ருகப் பாதுகாக்கப் பட்டேன் ; பகைவர்களாலும் பீடிக்கப்படாம லிருந்தேன்; மழை காற்று பனி வெய்யில் முதலிய துன்பங்களால் வருந்தாது இத்தருவில் சுகித்திருந்தேன். வலாரியே! தயையும் பக்தியு முள்ளவனுக வேறு இடம் செல்லாமலிருக்கும் என் விடயத்தில் அனுக்கிரகம் வைத்து, என் பிறவியை ஏன் பயன்படாமல் செய்கிருய் ? நான் அன்பும் பக்தியுமுள்ளவன் ; பாவத்தைப் புரியேன்; உபகாரிகள் விடயத்தில் தயை செய் வதுதானே தருமத்திற்கு முக்கியமான இலக் கணம். தயை செய்வதே நல்லோர்களுக்கு எப்போதும் மனத்திருப்தியை உண்டாக்கு கிறது. எல்லாத் தேவர்களும் தருமத்திலுள்ள சந்தேகங்களை உன்னிடத்திலேயே கேட்கின் றனர். அதனுலேதான் நீ தேவ சிரேட்டர் களுக்கு அதிபதியாகப் பட்டாபிஷேகம் செய் யப்பட்டிருக்கிருய். இந்திரனே! வெகு கால மாக இருந்த மரத்தை நான் விடும்படி நீ சொல்லத்தகாது. நல்ல நிலைமையிலிருந்ததை அடுத்துப் பிழைத்தவன், கெட்ட நிலைமைக்கு வந்தவுடன் அதை எப்படி விடலாம்?'' என்றது.

எக்காலமும் இப்பாதபம் எனதர்மென வைகி
முக்காலமும் முதிருங்கனி முசியாது நுகர்ந்தேன்;
இக்காலம் இதற்கிவ்வணம் இடையூறு கலந்தால்
துய்க்கா தகல்வதுவோ, உணர்வுடையோர் மதி
தூய்மை!

—மகாபாரதம்

இவ்வாறு கூறிய பொருளடங்கியதும் அழ குடையதுமாகிய கிளியினது வசனங்களால் மகிழ்வுற்ற மகவான், அதன் நன்றியறிவையும் தயையையும் எண்ணித் திருப்தியுற்று, தருமம் தெரிந்த இக்கிளியைப் பார்த்து ஒருவரம் கேள்'' என்று சொன்னுன். அன்பர்களே ! அக்கிளியானது தன் நன்மையைக் குறித்து வரம் கேட்கவில்லை. அதனுடைய பெருங் குணத்தை உற்று நோக்குங்கள். எப்போதும் பிறர் நோவாமையே பெரிதாகக் கருதிய அந்தக் கிளி, ''ஏ! தேவர் கோமானே! இம்மரமானது நன்ருகச் செழித்துத் தழைத்து ஓங்கவேண்டும்'' என்றது. அப்பறவையினுடைய உறுதியான பக்தியையும் நிரம்பின நல்லொழுக்கத்தையும் அறிந்து களிப்புற்ற இந்திரன் உடனே அம் மரத்தின் மீது அமிர்தம் பொழிந்தான். அதனுல் அத்தரு கனிகளும் இலைகளும் தளிர்களும் அழகிய கிளைகளும் உண்டாகித் தழைத்தது. கிளியினுடைய உறுதியான பக்தியால் அம்மரம் முன்னைக் காட்டிலும் மிகவும் நன்ருகச் செழித் தது. நன்றியறிவு தயை இந்நற்குணங்களின் பயனுகிய அச்செய்கையினுல் கிளியும் அத்தரு வில் இனிது மகிழ்ந்திருந்து, தன் ஆயுள் முடிந்த பிறகு இந்திர லோகத்தை யடைந்தது.

மெய்யன்பர்களே! அந்தக் கிளியானது பட்சியாக இருந்தும், மனிதர்களும் பின்பற்றுவ தற்கு அருமையான தருமத்தைக் கடைப்பிடித் தது. அத்தகைய தருமாத்மாவைச் சேர்ந்த தால், அந்த மரமும் சுகத்தை யடைந்தது. நல்லவர்களைச் சேர்ந்தவர்களுக்கு எப்போதும் இன்பமே உண்டாகும். ஆதலால் அக்கிளியின் தன்மையை உடையவர்களே நல்ல உறவினர். அவர்களுடனேயே இணங்க வேண்டும். கொலை புலை களவு முதலிய தீக்குணத்தினின்று நீங்கி, நன்றியறிவு, சாந்தம் கடவுள் பக்தி முதலிய நற்குணமுடையவரே உறவினர். மற்றவர் புறவினத்தார் என்கிருர், இராமலிங்க சுவாமி கள்.

''உயிர்க்கொலையும் புலைப்பசிப்பும் உடையவர்க ளெல்லாம்
உறவினத்தார் அல்லர்; அவர் புறவினத்தார்''

—திருவருட்பா

—o—

## தொல்காப்பியனுர் செந்தமிழ்

செகப்பிரியர் பேசிய சீர்மொழி என்று
மிகப் பெரிதும் கொள்கின்ருர் வீறு !—தகச்சிறிதும்
வள்ளுவர்தொல் காப்பியனுர் வாய்மலர்ந்த செந்தமிழ் என்று
உள்ளிஇன்பம் உற்றிலோம் நாம் !

—ந. ரா. முருகவேள்

"Remember that you are a human being with a soul and the divine gift of articulate speech; that your native language is the language of **Shakespeare** and **Milton** and **The Bible**; and don't sit there crooning like a bilious pigeon".

—**G. B. Shaw**, *in Pygmalion*

# வள்ளலாரின் உள்ளத்துடிப்பு

கவியோகி சுத்தானந்த பாரதியார்

**ஒருமையுணர்வு :**

காலப் புரட்சி நடந்து கொண்டேயிருக்கிறது. ஒவ்வொரு புரட்சிக்கும் தூண்டுகோலாக ஒரு கவி வருவதுண்டு. கலைப் புரட்சிக்குக் கம்பன் வந்தான். ''கம்ப நாடன் கவிதையைப் போல் கற்றோர்க்கு இதயம் களிக்காதே'' என்று புலவர் பாடினர். அரசியல் உரிமைப் புரட்சிக்கு மகாகவி பாரதியார் வந்தார். ''நாமிருக்கும் நாடு நமதென்பதறிந்தோம்'' என்ற உணர்வைத் தூண்டினர். எனது கவிதைகள் உலகில் சமயோகப் புரட்சி செய்வன.

மனித சமுதாயம் ஒன்றே-அதன்
மன்னவனுன மனச்சாட்சி ஒன்றே
இனிய வுலகமும் ஒன்றே-உல
கெங்கும் விளங்கும் இறைவனும் ஒன்றே
எல்லாரும் இன்புற வாரீர்

என்ற ஒருமையுணர்விலே நான் இசைத்துள்ளேன். என்னை ஆவேசப்படுத்திய கவிகள் மேனுட்டில் தாந்தே, ஷேக்ஸ்பியர், ரஸீன், கெத்தே. நமது நாட்டிலே கம்பர், காளிதாசர், வியாசர், வால்மீகி, டாகூர், அரவிந்தர், வள்ளலார் ஆகியோர். ஒரு தரம் அரவிந்தரிடம் எனது ஒருமைக் கவிதையைப் பாடி விளக்கினேன். அரவிந்தர் ஆன்மநேய ஒருமையே ஒருமை என்றார். இந்தச் சொல்லைக் கேட்டதுமே ஆன்மநேய வள்ளல் இராமலிங்கசுவாமிகள் நினைப்பு வந்தது. ''நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து'' என்ற பாட்டை ஆங்கிலத்திலே மொழிபெயர்த்துச் சொன்னேன். அரவிந்தர் மனமகிழ்ந்து வள்ளலார் வரலாற்றை எழுதச் சொன்னதுடன் இன்னும் சில கவிகளையும் கேட்டார். ஒரு வாரத்தில் Saint Ramalingar and His Revelations என்ற நூலை எழுதிப் படித்தேன். அதைப் பிற்காலம் அச்சிட்டு உலகெல்லாம் பரப்பினேன். வள்ளலாரின் அருட்புரட்சிக்கு அடியன் ஆனேன். காலத்திற்கேற்றபடி கவிகள் வருவதுண்டு. காலம் மறுமலர்ச்சியடையும் போது கவிஞன் தோன்றுவான். கவிதை நாக்கு நுனியிலிருந்து வருவதன்று. உள்ளச்சோலையிற் பூத்த அழகு மலரிலிருந்து கவிமணம் பரவுகிறது. சீர் கொண்ட, ஏர்கொண்ட, தார் கொண்ட, நார் கொண்ட என்ற எதுகை மோனைச் சொல்லடுக்கினலே கவிதை வந்தாலும் நிலைக்காது. செங்கலடுக்கும் கொத்தனர் போன்று சொல்லடுக்கினல் மட்டும் உண்மைக் கவியாகாது. பாரதியார் பாடல்கள் நந்தனர் கீர்த்தனம் மெட்டுகளிலும் காவடிச் சிந்து மெட்டுகளிலும் சித்தர் பாடல் மெட்டுகளிலும் புதிய கருத்துடன் அமைந்தன. திருவாசக நடை, திருமந்திரக் கருத்து, தாயுமானர் தெளிவுகளைக் கொண்டு, பழைய சித்தாந்தக் கருத்துக்களுடன் காலங் கருதும் சமரசக் கருத்துக்களையும் சேர்த்துப் பாடினர் வள்ளலார்.

எனது தமிழாசிரியர் தெய்வசிகாமணிப் புலவரே, வேலாயுத முதலியாருடன் சேர்ந்து நான்கு திருமுறைகளுக்கு முதற் பதிப்பை வெளியிட்டார். அவரே இறுதிக் காலத்தில் நடந்த அருட்பா மருட்பா வாதத்தைச் சமாதானப்படுத்தினர். வேதாந்த வித்தகரான சுந்தர சுவாமிகளையும், தெய்வசிகாமணிப் புலவரே சிதம்பரத்தில் வள்ளலாரிடம் அழைத்துச் சென்றார். இவரே வேதநாயகம் பிள்ளைக்கு அருட்பாவைப் படித்துக் காட்டியவர் ; அருட்பா முழுவதுமே இவர் எழுதி வைத்திருந்தார்.

திருவாசகத்தில் தீட்டிச் சாணை பிடித்துத் திருமந்திரக் கருத்திலே பட்டை போட்டு, சமரச சன்மார்க்க மணிகள் பதித்து நடராசப் பெருமானுக்கு அணிசெய்த வள்ளற் கவிகள், உள்ளத்தை உருக்கும் அருட்சோதியழகு நகைகள். அவை உள்முகப்பட்ட அருட் கனவில் எழுந்தவை. அவற்றின் பின்னே வாழ்வின் அநுபவங்கள் மிளிர்கின்றன. எனது தமிழாசிரியர் எத்தனையோ அனுபவங்களைச் சொன்னர்.

**கடவுட் கான் :**

சுந்தர சுவாமிகள், நடராசப் பெருமான் சந்நிதியில், வள்ளலார் மெய்மறந்து பாடுவதைக் கேட்டார். அவரது மகாதேவ மாலையைப் பார்த்தார். வள்ளற் பெருமான் பக்கத்திலே வணக்கமாக அமர்ந்து மகாதேவ மாலையில் ஒன்றை இனிய குரலெடுத்துப் பாடினர்.

உடல் குளிர உயிர் தழைக்க உணர்ச்சி பொங்க
உளங்கனிய மெய்யன்பர் உள்ளத் தூடே
கடல் அனைய பேரின்பந் துளிர்ப்ப நாளும்
கருணைமலர்த் தேன்பொழியும் கடவுட் கானே!
விடலரிய என்போல்வார் இதயந்தோறும்
வேதாந்த விருந்தளிக்கும் விருந்தே வேதம்
தொடலரிய வெளிமுழுதும் பரவிஞானச்
சோதிவிரிந் தொளிர்கின்ற சோதித்தேவே

இதுவே வள்ளற் பெருமான் உள்ளுருவம், அருளான்ம ஒளியுருவம். இந்த ஆன்ம ஒளியின் உள்ளத் துடிப்பு அருட்பாவில் வரிவரியாகக் காணும். ''அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த'' மாந்தரைத் திருத்திச் சன் மார்க்க சங்கத்திலே சேர்க்க வேண்டும். இகத்தே பரலோக சுகத்தை எல்லோரும் இனிது நுகரச் செய்ய வேண்டும். சுவர்க்க ராஜ்யத்தை உலகில் நாட்ட வந்த ஏசு கிறிஸ்து போலவே வள்ளலார் இகத்தே பரத்தை இலக்க வந்தார்.

**இருபத்தைந்து திட்டங்கள்:**

அப்பாநான் வேண்டுதல் கேட்டு
அருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான்
அன்புசெயல் வேண்டும்.

அன்பின் வழியது உயிர்நிலை என்ற வள்ளுவர் வாக்கை வள்ளலார் வாழ்ந்து காட்டினார்.

(2) எவ்வுயிர்த்திரளும் என்னுயிர் எனவே
எண்ணிநல் இன்புறச் செயவும்

(3) அவ்வுயிர்களுக்கு வரும் இடையூற்றை
அகற்றியே அச்சம் நீக்கிடவும்

(4) செவ்வையுள் உனது திருப்பதம் பாடிச்
சிவசிவ என்று கூத்தாடி

(5) ஒவ்வுறு களிப்பால் அழிவுறு திங்கே
ஓங்கவும் இச்சைகாண் எந்தாய்

(6) புண்படாவுடலும் புரைபடா மனமும்
பொய்படா ஒழுக்கமும் பொருந்திக்

கண்படா திரவு பகலும் நின்றனையே
கருத்தில் வைத்து ஏத்திடற்கு இசைந்
தேன்.

(7) தெற்சபையுலகத்து உயிர்க்கெலாம் இன்பம்
செய்வதென் இச்சைகாண்எந்தாய்

(8) தங்கமே யனையார் கூடிய ஞான
சமரச சுத்தசன்மார்க்க
சங்கமே கண்டு களிக்கவும்

(9) சங்கம் சார்திருக் கோயில் கண்டிடவும்,

(10) தங்கமே யனைய சங்கம்நீடூழி துலங்கவும்,

(11) சங்கத்தில் அடியேன் அங்கமே குளிர
நின்னைப் பாடி ஆடவும் இச்சைகாண்
எந்தாய்

(12) எவ்வுயிரும் பொதுஎனக் கண்டு
இரங்கி உபகரித்தல்.

(13) திருநெறி வித்தகர்க்கு ஏவல் செய்தல்

(14) உயிர்க்கொலை நீக்குதல்.

(15) புலாலுணவை மறுத்தல்

(16) சீவகாருண்யத் தொண்டாற்றல்

(17) சாதிப்பிரிவினை ஒழிப்பு.

(18) சமய வேறுபாட்டொழிப்பு.

(19) சுத்தசன்மார்க்க ஒழுக்கமும் விளக்கமும்

(21) ஏழைகளுக்கு உணவளித்தல்.

(22) அரும்பிணி தீர்த்தல்

(23) அருள்வல்லபத்தாலே சத்தியதருமச்சாலை.
துவக்குதல்.

(24) சமரச பாடசாலை நாட்டி அருட்பா
பயிற்றுதல்.

(25) ஆன்மவுணர்வு செழித்த மாந்தரை அருளு
ணர்வுக்கு எழுப்புதல்

ஆகிய இருபத்தைந்து திட்டங்களை நிறைவேற்றுதலே வள்ளற் பெருமான் உள்ளமாகும்.

**வள்ளலார் பெற்ற வரம்:**

வள்ளற்பெருமான், சிதம்பரத்திலிருந்து 14 மைல் தொலைவிலுள்ள மருதூரில் அவதரித்தார். (5-10-1823). கவிதையும் அவருடன் பிறந்தது, கடவுளன்பு சிறந்தது. கந்தக் கோட்டத்தில் முருகனைப் பாடினார்; தணிகை முருகனை ஒளிக் கண்ணாடியிலே வழிபட்டார். திருவொற்றியூர்த் தியாகராசப் பெருமானைப் பாடினார். சென்னையிற் சில காலம் இருந்து, சிதம்பரம் நடராசரை வணங்கி, வடலூரில் தமது ஆயுட் பணியை 1870 ஆண்டு தொடங்கிச் சத்திய ஞான சபை எழுப்பினார். நான்கு ஆண்டுகள் தம் அருள் வல்லபத்தாலே தொண்டு செய்தார். 51ஆம் வயதில் 1874ல் மறைந்தார். என்னை வெட்டிப் போட்டாலும் வேறிடம் கேளேன், நான் பிறரிடம் கையேந்தக் கூடாது. என்னிடம் இரப்போர்க்கு இல்லையென்னாது தர வேண்டும் என்ற வரத்தை வள்ளலார் ஆண்டவனிடம் வேண்டினார். திருவருளால் எத்தனையோ அற்புதங்களைச் சிறு வயதிலே செய்தார் அருளாளர். பாம்பு தேள் கடி மாற்றினார். அவர் பெயர் சொன்னாலே நச்சுயிர்கள் தீண்டுவதில்லை. ''பிச்'' என்றால் பேயும் ஓடிப்போகும்.

**வருந்தினார்:**

இளமையில் அவர் அனாதையாக மிகவும் வருந்தினார். அண்ணன் சபாபதி சோறு கூடப் போடவில்லை. அண்ணியின் அன்பே அவருக்கு இரங்கியது. திடீரென்று ஒரு நாள் பெரிய புராணத்திற்கு விரிவுரை நிகழ்த்திய அற்புதத்தைக்கேட்டு, கந்தரைப் பாடிய உருக்கத்தைக் கேட்டு, அண்ணன் சபாபதியும், ஆசிரியர் சபாபதியும், இது தெய்வப் பிறவி என்று பாராட்டினர். இருப்பினும் பிறரை எதிர்பார்க்காமல் திருவருட் சார்பிலேயே நமது அருட்பாவலர் வளர்ந்தார். உலகோர் இசை வசைகளை அவர் மனங்கொள்ளவில்லை. அவர் ஒரு திருமணத்திற்கு வரவழைத்தபோது பாடினார்

''சோடில்லை; மேல் வெள்ளைச் சொக்காயில்லை
நல்ல சோம னில்லை
பாடில்லை; கையிற் பணமில்லை
தேகப் பருமனில்லை
வீடில்லை; யாதொரு வீறுப்பும்
இல்லை; விவாகமது
நாடில்லை நீ நெஞ்சமே எந்த
வாறுஇனி நண்ணுவையே''

அவர் கையைக் கட்டியே நடந்தார். அவர் உள்ளமெல்லாம் சற்குருமணியான நடராச ரிடம் தோய்ந்திருந்தது. ''உடுக்கக் கந்தை யில்லை; படுக்கப் பாயில்லை, உண்ண வழியில்லை; பிச்சை எடுத்திடவும் திடமில்லை; உயிரை விடுக்கவும் மனமில்லை என் செய்வேன்'' இவ் வாறு குறையிரக்கும் அரும் உளம் புகுந்தான். குரிசிலுக்கு இறைவன் எல்லாம் அளித்தான். வள்ளலார் பாடியதும், சித்தாடியதும், நாடிய தும் கூடியதும் தில்லையப்பனின் எல்லையில்லாக் கருணையே. மாணிக்கவாசகர்,

''நானேயோ தவம் செய்தேன்
சிவாயநம எனப் பெற்றேன்
தேனாய் இன் அமுதமுமாய்த்
தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்தென் உள்ளம்புகுந்து
அடியேற்கு அருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை
ஒறுத்து அன்றே வெறுத்திடவே

என்ற அதே அனுபவமே, வள்ளலார் பெற்ற அருளனுபவமாகும்.

நானே தவம்புரிந்தேன்! நானிலத்திர் அம்பலவன்
தானே வந் தென்னைத் தடுத்தாண்டான்-ஊனே
புகுந்தான், என் உள்ளம் புகுந்தான்; உயிரிற்
புகுந்தான் கருணை புரிந்து.

**கருங்குழி வாழ்வு :**

வள்ளலார் 16 ஆண்டுகள் கருங்குழி வெங் கடரெட்டியார் வீட்டிலே இருந்து பாட்டெழு தினர். ஓர் இரவில் பாட்டெழுதும்போது, விளக்கிலே எண்ணெய் வற்றிப் போனது ; உடனே தண்ணீர் விட்டார் ; விளக்கு பளிச் சென்று எரிந்தது. பாலு ரெட்டியார் தொழு நோயால் வருந்தினர் ; வள்ளலார் திருநீறணிந் தார். ரெட்டியார் திருநீற்றை உடம்பிலே பூசிக்கொண்டு, அருட்சோதி சிவமே வணக்கம் என்றார். நோய் தீர்ந்தது. முத்து நாராயண ரெட்டியார் கண் பார்வை இழந்தார். வள்ள லார் திருநீறளித்தார். கண் தெரிந்தது. ரெட்டியார் தமது நிலத்தை வள்ளலாருக்கே அளித்தார். வள்ளலார் அந்த நிலத்தைச் சீனி வாசப் பெருமாள் கோயிலுக்கே அளிக்கச் செய் தார். இன்றும் பெருமாளுக்குப் படைத்த சோறு அன்பருக்குக் கிடைக்கிறது. ஒரு வாழைத் தோட்டத்தில் வள்ளலாரைப் பாம்பு கடித்தது; அன்பர் அதைக் கொல்லக் கல்லெடுத்தார். வள்ளலார் தடுத்து ''அதுவே இறந்து விழும்'' என்றார். அவ்வாறே நிகழ்ந்தது. ''இராம லிங்கம் ஆணை'' என்றால் பாம்பும் தேளும் கடிப்பதில்லை. கடலூர் வேதநாயகம் பிள்ளை வள்ளலாருடன் சென்றார்; பசி எடுத்தது. வள்ள லார் உடனே பலகாரம் வரவழைத்துத் தந்து, குடிக்கத் தண்ணீரும் தந்தார்.

# நூல்கள் அறிமுகம்

**1. நம் நாட்டுச் சித்தர்கள் :** இந்நூல், சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த் துறைத் துணைப் பேராசிரியர் திரு டாக்டர் இரா. மணிவாசகம் அவர்களால் எழுதப் பெற்றது. வழிவழி வந்த செந்தமிழ்ப் புலமையும், சமய நெறி உணர்வும் இந்நூலாசிரியரிடம் சிறந்து திகழ்கின்றன. சித்தர் வணக்கம், சித்தர்கள் பற்றிய விளக்கம், தமிழ் நாட்டில் சித்தர் நெறி, பதினெண் சித்தர், நம் நாட்டுச் சித்தர்கள், சித்தர்கள் காலம், சித்தர்கள் தொண்டு என்னும் தலைப்புக்களில் ஆசிரியர் இந்நூலை அழகுற ஆராய்ந்து எழுதியுள்ளார். சித்தர்களைப் பற்றிய, பரவலான பல பொதுச் செய்திகளை அறிந்து கொள்ளு தற்கு, இந்நூல் பெரிதும் பயன்படும். சிறந்த நல்ல பயன் மிக்க நூல். திருத்தமான அழகிய நல்ல பதிப்பு. கிடைக்குமிடம் : 23/6, செல்லம்மாள் தெரு, அமைந்தகரை, சென்னை-30.

**2. திரு. அம்பர்ப் புராணம் :** மகாவித்துவான் மீனட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய தலபுராணம். சோழ நாட்டில் நன்னிலம் வட்டத்தில், பூந்தோட்டத்திற்கு நேர் கிழக்கே 2 கல் தொலைவில் அரிசிலாற்றின் கரையில், அம்பர் என்னும் திருத்தலம் உள்ளது. சோமாசிமாற நாயனர் வழிபட்டு அருள் பெற்ற தலம். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது. மகாவித்துவான் மீனட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் 15 படலங்களாகத் தல புராணத்தில் பாடியுள்ளார். மூலத்துடனும் உரைக் குறிப்புக்களுடனும், வரலாற்றுச் சுருக்கங்களுடனும், இந்நூல் மிகச் சிறந்த முறையில் திருத்தமும் அழகும் அமையப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது. கிடைக்குமிடம் : மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதைய்யர் நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை-41.

**3. திருவாரூர்ப் புராணம் :** மறைஞான சம்பந்த நாயனர் என்னும் சைவப் பெருங் கவிஞர் சுமார் 400 ஆண்டுகளுக்கு முன்னர்ப் பாடியருளிய சிறந்த தல புராண இலக்கியம். 24 சருக்கங்கள் கொண்டது. நல்ல சுவை மிக்க கவிதை இலக்கிய நூல். சைவத் தமிழன்பர்களுக்குப் பெரிதும் பயன் படும். திருவாரூர் பற்றிய பல வகை வரலாறுகளையும் இந்நூலின் வாயிலாகத் தெரிந்து கொண்டு பயன் பெறலாம். திருத்தமான அழகிய சிறந்த பதிப்பு. குறிப்புரைகள், அருஞ்சொற் பொருள்கள், முன்னுரை கள் முதலியன சேர்க்கப் பெற்றுள்ளன. கிடைக்குமிடம் : மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதைய்யர் நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை-41.

—ஆசிரியர்.

# தேவாரப் பாடல்பெற்ற சிவத்தலங்கள்

நமது தமிழகத்தில் சிவபிரான் எழுந்தருளி விளங்கும் திருக்கோயில்கள், எண்ணற்றனவாக எத்தனையோ பல இருப்பினும், அவைகளுளெல்லாம் மிக்க சிறப்பும், தெய்விகப் பெருமையும் வாய்ந்தனவாக மதித்துப் போற்றப்பெறும் திருக்கோயில்கள், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் சைவ சமய ஆசிரியர்கள் நால்வருள், ஒருவராலோ பலராலோ, புகழ்ந்து பாடப்பெற்ற சிவத் தலங்களேயாகும். இவைகள் மொத்தம் 275 ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| சோழ நாடு | ... | ... | 191 |
| ஈழ நாடு | ... | ... | 2 |
| பாண்டி நாடு | ... | ... | 14 |
| மலை நாடு | ... | ... | 1 |
| கொங்கு நாடு | ... | ... | 7 |
| நடு நாடு | ... | ... | 22 |
| தொண்டை நாடு | ... | ... | 32 |
| துளுவ நாடு | ... | ... | 1 |
| வட நாடு | ... | ... | 5 |
| மொத்தம் | ... | ... | 275 |

இவைகள் சுமார் 1,500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையும் பெருமையும் வாய்ந்தவைகளாக விளங்கி வருகின்றன. பல்லவர் சோழர் பாண்டியர் என்னும் பழந்தமிழ் அரசர்களாலும், விசயநகர அரசர், நாயக்க மன்னர் முதலியவர்களாலும், இத்திருக்கோயில்கள் அவ்வப்போது பல திருப்பணிகள் செய்யப்பெற்றுத் திகழ்கின்றன. அளப்பரும் அருமை பெருமைகள் வாய்ந்த, தேவாரப் பாடல் பெற்ற சிவத் தலங்கள் யாவை என்பதும், அவைகள் எங்கெங்கு உள்ளன என்பதும் பற்றிய, சில குறிப்புக்களை மட்டும் இங்குக் காண்போம்.

### சோழ நாட்டுத் தலங்கள்

*(காவிரிக்கு வடகரையில் உள்ளவை : 63)*

(1) **கோயில் :** சைவர்களுக்குக் கோயில் என்பது சிதம்பரம்; வைணவர்களுக்குக் கோயில் என்பது திருவரங்கம். இந்நாளில் சிதம்பரம் என வழங்கும் இத் தலம், முன்பு தில்லை எனப் பெயர் பெற்றிருந்தது. தில்லை என்னும் ஒருவகை மரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்த காரணத்தால், சிதம்பரம் தில்லை எனப் பண்டைக் காலத்தில் சொல்லப் பெற்று வந்தது. இது சென்னை-திருச்சிராப்பள்ளி நேர் இருப்புப் பாதையில், ஒரு நிலையம். இங்குள்ள கோயில் சபாநாயகர் (நடராசர்) கோயில் என வழங்கப் பெறுகிறது. அம்மை, சிவகாமி. விநாயகர், கற்பக விநாயகர்; முருகன், பாண்டி நாயகம். நால்வர் பாடலும் பெற்றது.

(2) **திருவேட்களம் :** இது சிதம்பரம் நிலையத்திற்குக் கிழக்கே 2 கல். இப்போது இதன்கண் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அமைந்திருக்கிறது. இங்குள்ள கொற்றவன் குடி என்னும் பகுதியில், சைவசித்தாந்த ஆசிரியர்களில் ஒருவராகிய உமாபதி சிவத்தின் சமாதிக் கோயில் உள்ளது. பாசுபதேசுவரர், நல்லநாயகி. அருச்சுனன் இங்கு இறைவனை வழிபட்டுப் பாசுபத அத்திரம் பெற்றான். சம்பந்தர் அப்பர் பாடல் பெற்றது.

(3) **திருநெல்வாயில் :** இது சிதம்பரத்திற்குத் தென்கிழக்கில் 3 கல். இப்போது சிவபுரி என வழங்குகின்றது. உச்சி நாதர், கனகாம்பிகை. சம்பந்தர் பாடல் பெற்றது.

(4) **திருக்கழிப்பாலை :** சிதம்பரத்திற்குத் தென்கிழக்கில் 3 கல். கொள்ளிட நதியின் வெள்ளப் பெருக்கால் இத்தலத்தின் திருக்கோயில் சிதைந்து போயிற்று. இங்கிருந்த கடவுட் படிமங்கள் திருநெல்வாயிலுக்குக் கொண்டு சென்று வைத்து வழிபடப் பெறுகின்றன. பால்வண்ண நாதர், வேதநாயகி. சம்பந்தர் அப்பர் சுந்தரர் பாடல் பெற்றது.

(5) **திருநல்லூர்ப் பெருமணம் :** சிதம்பரத்திற்குத் தெற்கே 5 கல். திருஞானசம்பந்தருக்குத் திருமணம் நிகழ்ந்து, அவர் அடியார்களுடன் சிவசோதியிற் கலந்த சிவத்தலம். இவ்வூர் ஆச்சாபுரம் என இந்நாளில் வழங்குகின்றது. சிவலோகத் தியாகர், திருவெண்ணீற்று உமையம்மை. சம்பந்தர் பாடல் பெற்றது.

(6) **திருமகேந்திரப்பள்ளி :** சென்னை — திருச்சிராப்பள்ளி நேர் இருப்புப் பாதையில் கொள்ளிடத்திற்கு வடகிழக்கே 8 கல். திரு

நல்லூர்ப் பெருமணத்திலிருந்து 3 கல். இந்திரன் பிரமன் சந்திரன் சூரியன் ஆகியோர் வழிபட்டு அருள் பெற்ற தலம். திருமேனி அழகர், வடிவம்மை. சம்பந்தர் பாடல் பெற்றது.

(7) தென் திருமுல்லைவாயில் : சீர்காழிக்குக் கிழக்கே 2 கல். அம்பிகை வழிபட்டு இறைவன் பால் திருவைந்தெழுத்து உபதேசம் பெற்ற தலம். முல்லைவன நாதர், கோதையம்மை. சம்பந்தர் பாடல். சென்னை அம்பத்தூருக்கு அருகில் இருப்பது, வட திருமுல்லைவாயில்.

(8) கலிக்காமூர் : தென் திருமுல்லைவாயிலுக்குத் தென்மேற்கே 3 கல். இப்போது அன்னப்பன்பேட்டை என வழங்கப்படுகின்றது. சுந்தரேசர், அழகுவனமுலையம்மை. சம்பந்தர் பாடல்.

(9) திருச்சாய்க்காடு : சீர்காழிக்குத் தென்கிழக்கே 9 கல். சாயாவனம் என வழங்குகின்றது. இயற்பகை நாயனார் வரலாற்றுத் தொடர்புடையது. பண்டைக் காலத்தில் புகழ் மிக்கு விளங்கியிருந்த புகார் நகரத்திற்கு அருகில் அமைந்திருத்தலின், புகார்ச் சாய்க்காடு எனவும் குறிப்பிடப் பெறும். சாய்க்காட்டு ஈசர். குயிலினும் நன்மொழியம்மை. சம்பந்தர் அப்பர் சுந்தரர் பாடல்.

(10) திருபல்லவனீச்சரம் : சீர்காழிக்குத் தென்கிழக்கே 10 கல். பல்லவ மன்னன் வழிபட்டது. இது காவிரிப்பூம்பட்டினம் எனவும் வழங்கப்பெறும். இயற்பகை நாயனார், பட்டினத்தடிகளார் தோன்றியருளிய தலம், பல்லவனீசுவரர், சௌந்தரநாயகி. சம்பந்தர் பாடல்.

(11) திருவெண்காடு : சீர்காழிக்குத் தென் கிழக்கே 7 கல். சிவஞான போதம் என்னும் சைவ சித்தாந்தப் பெருநூலை இயற்றிய மெய் கண்ட தேவர் தோன்றியருளிய தலம். இங்கு உள்ள சோமகுளம், சூரிய குளம், அக்கினி குளம் என்னும் மூன்றும், இங்கு மிகவும் புகழ் பெற்ற புண்ணிய தீர்த்தங்களாகும். வில்வம், கொன்றை, ஆல் என்னும் மரங்கள் இத்தலத்துக்குரிய சிறப்பு மரங்களாகும். ஐராவதம் என்னும் வெள்ளை யானை வழிபட்டு அருள்பெற்றது. திருக்கடவூரைப் போல, இதுவும் ஒரு காலசம்மாரத் தலமாகும். சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடல்.

(12) கீழைத் திருக்காட்டுப்பள்ளி : திருவெண்காட்டுக்கு மேற்கில் ஒரு கல். ''ஆரணியேசுவரர் கோயில்'' என வழங்குகின்றது. ஆரணியசுந்தரர், அகிலாண்ட நாயகி. சம்பந்தர் பாடல்.

(13) திருக்குருகாவூர் வெள்ளடை : சீர்காழிக்குக் கிழக்கே 4 கல். சுந்தரர்க்குச் சிவபெருமான் பொதி சோறு வழங்கியருளிய தலம். இப்போது திருக்கடாவூர் என வழங்குகின்றது. பொதி சோறு வழங்கிய திருவிழா சித்திரை மாத நிறைநிலா நாளில் நடைபெறுகின்றது. இங்குள்ள பாற்கிணற்றுத் தீர்த்தம் புகழ் மிக்கது. தை அமாவசையில், இதன் நீர் பால்நிறமாக மாறிக் காணப்பெறுகிறது. அப்போது தீர்த்த வாரி விழா நிகழும். வெள்ளடையப்பர், காவியங்கண்ணம்மை. சுந்தரர் பாடல்.

(14) சீர்காழி : திருஞான சம்பந்தர் அவதாரத் தலம். சென்னை-திருச்சி நேர் இருப்புப் பாதையில் ஒரு நிலையம். இதற்குப் பிரமபுரம் வேணுபுரம் புகலி வெங்குரு தோணிபுரம் பூந்தராய் சிரபுரம் புறவம் சண்பை கொச்சை வயம் கழுமலம் என்னும் வேறு பெயர்களும் உண்டு. சிவபெருமான் இங்கு இலிங்கம் குரு சங்கமம் என்னும் மூன்று நிலைகளில் காட்சி தருகின்றார். பிரமன் வழிபட்ட பிரமலிங்கேசர் கருவறையிலும், கட்டு மலையின்மேல் தோணியப்பரும், உச்சிக் கோயிலின் மீது சட்டை நாதரும் எழுந்தருளி விளங்குகின்றனர். கோயில் சட்டை நாத சுவாமி கோயில் என வழங்குகின்றது. பிரமபுரீசர், திருநிலைநாயகி; தோணியப்பர், பெரியநாயகி, சம்பந்தர் அப்பர் சுந்தரர் ஆகிய மூவரும் பாடியுள்ளனர்.

(15) திருக்கோலக்கா : சீர்காழி நிலையத்திலிருந்து அரைக் கல் தொலைவில் உள்ளது. சம்பந்தர் தாளம் பெற்ற தலம். ஆதலின் ''திருத்தாளம் உடையார் கோயில்'' எனக் கூறப்பெறும். சம்பந்தர் சுந்தரர் பாடல். சத்தபுரிநாதர், ஓசை கொடுத்த நாயகி.

(16) திருப்புள்ளிருக்கு வேளூர் : இது வைத்தீசுவரன் கோயில் என வழங்குகின்றது. சென்னை-திருச்சி நேர் இருப்புப் பாதையில் ஒரு நிலையம். கோயில் மேற்கு நோக்கியுள்ளது. சம்பாதி சடாயு என்னும் இரண்டு புள்ளும் (பறவைகளும்), இருக்கு வேதமும், முருகனாகிய வேளும், வழிபட்டதனால் இதற்குத் திருப் புள் இருக்கு வேள் ஊர் எனப் பெயரமைந்தது. ''மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித் தீரா நோய் தீர்த்தருள வல்லான்'' என்று திருநாவுக்கரசர் பாடியிருப்பதனால், இங்குள்ள சிவபெருமானுக்கு வைத்தியநாதர் என்ற பெயர் ஏற்பட்டது. தன்வந்திரி என்னும் சித்தர்இங்குச் சமாதி கொண்டுள்ளார் என்பது ஐதிகம். முத்துக் குமார சுவாமி சந்நிதி, இங்கு மிகவும் முதன்மை வாய்ந்தது. இங்குள்ள திருக்குளம் சித்தாமிர்த தீர்த்தம் எனப்பெறும். இக் குளத்தில், தவளைகள் காணப்படாமை ஒரு பெரும் வியப்பாகும். தல மரம் வேம்பு. வைத்தியநாதர், தையல் நாயகி. சம்பந்தர் அப்பர் பாடல்.

(17) திருக்கண்ணார் கோயில் : இது வைத்தீசுவரன் கோயில் நிலையத்திற்குத் தென் கிழக்கே 2 கல். கௌதம முனிவரின் சாபத்திலிருந்து நீங்கி, இந்திரன் ஆயிரம் கண்கள் பெற்ற தலம். அதனால் கண்ணார்கோயில் எனப் பெயர் பெற்றது. சம்பந்தர் பாடல். கண்ணாயிரநாதர், முருகுவளர் கோதை.

(18) திருக்கடைமுடி : சென்னை-திருச்சி நேர் இருப்புப் பாதையில் ஆனந்தத் தாண்டவ புரம் நிலையத்திற்கு வடகிழக்கிலுள்ள திருநின்றியூர்த் தலத்திலிருந்து தென்கிழக்கே 4 கல். இப்போது கீழையூர் என வழங்குகின்றது. கல்

வெட்டுக்கள் இதனைத் திருச்சென்னம்பூண்டி என்று குறிக்கின்றன. மேற்குப் பார்த்த கோயில், பிரமன் வழிபட்டது. கடைமுடிநாதர். அபிராமியம்மை. சம்பந்தர் பாடல்.

(19) திருநின்றியூர் : மாயூரத்திற்கு அருகில் உள்ள ஆனந்தத் தாண்டவபுரம் நிலையத்திற்கு வடகிழக்கே 2 கல். திருமகள் வழிபட்ட தலம். சம்பந்தர் அப்பர் சுந்தரர் பாடல். மகாலட்சுமி நாதர், உலகநாயகி.

(20) திருப்புன்கூர் : இது வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து மேற்கே 3 கல். புன்கு என்னும் மரம் இத்தலத்திற்கு உரியது ஆதலின், இதற்குத் திருப்புன்கூர் எனப் பெயரமைந்தது. திருநாளைப் போவார் என்னும் நந்தனருக்காகச் சிவ பெருமான் கட்டளையிட்டபடி, நந்தி விலகிய தலம். ஏயர்கோன் கலிக்காமர், சுந்தரர் இருவரும் சேர்ந்து வழிபட்ட தலம். கலிக்காமர் தோன்றிய திருப்பெருமங்கலம், வடக்கே ஒரு கல்லில் உள்ளது. நந்தனர் தோன்றிய ஆதனூர் என்பதும் வடக்கே ஒரு கல்லில் உள்ளது. நந்தனர் அகழ்ந்த திருக்குளம் கோயிலின் பின்புறம் உள்ளது. சம்பந்தர் அப்பர் சுந்தரர் பாடல் பெற்றது. சிவலோக நாதர், சொக்கநாயகி.

(21) திருநீடூர் : மாயூரத்திற்கு வடக்கேயுள்ள ஒரு நிலையம். உலகமெல்லாம் அழியும் ஊழிக் காலத்திலும் அழியாமல், நீடித்து இருந்ததனுல், நீடூர் எனப் பெயர் பெற்றது. முனை அடுவார் வாழ்ந்து, தொண்டு புரிந்த தலம். மகிழமரம் தல மரம். அருட்சோமநாதர், வேயுறு தோளியம்மை. சுந்தரர் பாடல்.

(22) திருஅன்னியூர் : நீடூர் நிலையத்திற்கு மேற்கே 3 கல். வருணன் வழிபட்டது. எலுமிச்சை தல மரம். ஆபத் சகாயர், பெரிய நாயகி. சம்பந்தர், அப்பர் பாடல்.

(23) திருத்துருத்தி : இது இப்போது குற்றாலம் என வழங்குகிறது. இது நெல்லை மாவட்டத்தில் அருவியால் புகழ் பெற்ற திருக்குற்றாலத்திற்கு வேறானது. மாயூரத்திற்கு அருகில் உள்ளது. மாயூரத்திற்குத் தென் மேற்கே 6 கல். சுந்தரர் உடற் பிணி தீரப் பெற்ற தலம். உத்தரவேதீசுவரர், மிருது முகிழாம்பிகை. சம்பந்தர் சுந்தரர் பாடல்.

(24) திருவேள்விக்குடி : மாயூரத்திற்குத் தென்மேற்கே உள்ள குற்றாலத்திற்கு வடகிழக்கில் மூன்று கல். ஓர் அரசிளங் குமரனுக்கு அவன் காதலித்த பெண்ணைச் சிவ பெருமான் இங்குத் திருமண வேள்வி செய்வித்தார். அதனுல் வேள்விக்குடி எனப் பெயரமைந்தது. திருத்துருத்தியையும் வேள்விக் குடியையும் சேர்த்துத் தேவார ஆசிரியர்கள் பாடியுள்ளனர். கலியாணசுந்தரர், பரிமளகந்தநாயகி.

(25) திரு எதிர்கொள்பாடி : குற்றாலம் நிலையத்திலிருந்து 5 கல். ஐராவதம் வழிபட்ட தலம். தன் அடியவர்களாகிய மணமக்களைச் சிவபெருமான், அம்மான் முறையாக எதிர்கொண்டருளியதனுல், இப்பெயர் பெற்றது. ஐராவதநாதர், மலர்க்குழல் நாயகி. சுந்தரர் பாடல்.

(26) திருமணஞ்சேரி : குற்றாலம் நிலையத்திலிருந்து 3 கல். சம்பந்தர் அப்பர் பாடல். சிவபெருமான் தன் அடியவன் ஒருவனுக்கு இங்குத் திருமணம் செய்வித்தார். அதனுல் திருமணஞ்சேரி எனப் பெயர் பெற்றது. அருள் மொழி நாதர், யாழினும் மென்மொழியாள்.

(27) திருக்குறுக்கை வீரட்டம் : மாயூரத்திற்கு அருகிலுள்ள நீடூர் நிலையத்திலிருந்து 7 கல். தல மரம் கடுக்காய். சிவபெருமான் காமதகனம் செய்த தலம். தீர்க்கவாகு என்னும் முனிவரின் நீண்ட கைகள் இறைவனை வழிபடுவதற்குக் குறுகிய தலமானதால், குறுக்கை எனப் பெயர் பெற்றது. அப்பர் பாடல். இங்குள்ள நடராசர் மன்றம், காமாங்க நாசனி சபை (சம்புவிநோத சபை) என வழங்கப் பெற்று வருகிறது. வீரட்டேசுவரர், ஞானம்பிகை.

(28) திருக்கருப்பறியலூர் : வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து ஐந்து கல். இங்குள்ள கோயில் கொகுடிக் கோயில் என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப்பெறும். தலமரம் கொகுடிமுல்லை. இத்தலம் இப்போது மேலைக் காழி எனவும், தலைஞாயிறு எனவும் வழங்குகின்றது. இந்திரன் செய்த குற்றத்தைப் பொறுத்து அருள் புரிந்ததனுல் இங்குள்ள சிவபெருமானுக்குக் குற்றம் பொறுத்த நாதர் என்று பெயர். அம்மை கோல்வளை நாயகி. சீர்காழியிற் போலவே, இங்கும் கட்டு மலைமேல் ஏறி, இறைவனையும் இறைவியையும், உச்சியில் ஏறிச் சட்டை நாதரையும் கண்டு வணங்கலாம்.

(29) திருக்குரக்குக்கா : வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து 6 கல். குரங்கு வடிவிலுள்ள ஆஞ்சநேயர் வழிபட்ட தலம். அதனுல் குரக்குக்கா எனப் பெயர் பெற்றது. அப்பர் பாடல். குந்தள நாதர், குந்தளநாயகி.

(30) திருவாழ்கொளி புத்தூர் : வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து மேற்கே ஐந்து கல். இது திரு வாள் ஒளி புற்றூர் எனவும் வழங்கும். அருச்சுனனின் கை வாளைச் சிவபெருமான் ஒரு புற்றில் ஒளித்து வைத்து அருளினர் என்பது தல வரலாறு. இங்குப் பஞ்ச பாண்டவர் ஐவரும் வழிபட்டனர். திரௌபதி பூசித்த வலம்புரி விநாயகர் இங்கு உள்ளார். எதிரில் நச்சுப் பொய்கை உள்ளது. மாணிக்க வண்ணர், வண்டமர் பூங்குழல் அம்மை. சம்பந்தர் சுந்தரர் பாடல்.

(31) மண்ணிப்படிக்கரை : இது வைத்தீசுவரன் கோயில் நிலையத்திலிருந்து மேற்கே 8 கல். இது இப்பொழுது இலுப்பைப்பட்டு என வழங்குகின்றது. சுந்தரர் பாடல். நீலகண்டர், அமிர்தவல்லி.

(32) திருஓமாம்புலியூர் : சிதம்பரம் நிலையத்திலிருந்து தென்மேற்கே 19 கல். குற்றாலம் நிலையத்திலிருந்து 11 கல். அம்பிகை இறைவன்பால் ஓங்கார உபதேசம் பெற்ற தலம். ஆதலின் ஓம் ஆம் புலியூர் எனப் பெயர் பெற்றது. (பிரணவ வியாக்கிர புரம்).

(33) திருக்கானாட்டு முள்ளூர் : சிதம்பரம் நிலையத்திலிருந்து 18 கல். அத்தி மரமும் வெள்ளெருக்கும் தல மரம். பதஞ்சலி முனிவர் வழிபட்டது. பதஞ்சலி ஈசுவரர், கானார் குழல் அம்மை. சுந்தரர் பாடல்.

(34) திருநாரையூர் : சிதம்பரம் நிலையத்திலிருந்து தென்மேற்கே 10 கல். தலமரம் புன்னைகம். நாரை வழிபட்டு அருள் பெற்ற தலம். நம்பியாண்டார் நம்பிகள் திருமுறைகளைக் கண்டு தொகுப்பதற்கு உதவி புரிந்த பொல்லாப் பிள்ளையார், இத்தலத்திலேயே எழுந்தருளியுள்ளார். சம்பந்தர் அப்பர் பாடல். சௌந்தரேசுவரர், திரிபுரசுந்தரி.

(35) திருக்கடம்பூர் : சிதம்பரம் நிலையத்திலிருந்து 15 கல். இங்குள்ள கோயில் "கரக் கோயில்" என்னும் சிறப்புப் பெயரால் வழங்கும். இந்திரன் வழிபட்டு அமிழ்தம் பெற்ற தலம். அமிர்தகடேசர், சோதிமின்னம்மை. சம்பந்தர் அப்பர் பாடல்.

(36) திருப்பந்தணை நல்லூர் : திருவிடைமருதூர் நிலையத்திலிருந்து வடகிழக்கே 8 கல். குற்றாலம் நிலையத்திலிருந்து வடமேற்கே 6 கல். தேவ மகளிரும் காமதேனுவும் பூசித்த தலம். மணவாளக் கோலம். பசுபதி நாதர். காம்பன தோளியம்மை. சம்பந்தர், அப்பர் பாடல்.

(37) திருக்கஞ்சனூர் : இது கும்பகோணத்திற்கு அருகில் உள்ள நரசிங்கன்பேட்டை நிலையத்திலிருந்து ஒரு கல். அரதத்த சிவாச்சாரியர் அவதரித்த தலம். இங்கு நடராசர் சிவகாமியம்மை கற்படிமங்கள் உள்ளன. கஞ்சன் என்னும் பிரமதேவன் வழிபட்டதனால், கஞ்சனூர் ஆயிற்று. அக்கினி வழிபட்டதனால் சிவபெருமான் அக்கினி ஈசுவரர் என்று இங்குப் பெயர் பெற்றார். அம்மை, கற்பக நாயகி. அப்பர் பாடல்.

(38) திருக்கோடிகோ : நரசிங்கன்பேட்டை நிலையத்திலிருந்து ஒரு கல். திருவிடைமருதூருக்குக் கிழக்கே 2 கல். மூன்று கோடி முனிவர்கள் வழிபட்டதனால், இப்பெயர் பெற்றது என்பர். சம்பந்தர், அப்பர், பாடல். கோடிகா ஈசுவரர், வடிவம்மை.

(39) திருமங்கலக்குடி : மாயூரத்திற்கு அருகில் உள்ள ஆடுதுறை நிலையத்திலிருந்து 2 கல். சூரியன் பிரமன் திருமால் அகத்தியர் மகாகாளி என்னும் ஐவரும் வழிபட்ட தலம். சம்பந்தர் அப்பர் பாடல். புராணவரத ஈசுவரர், மங்கள நாயகி.

(40) திருப்பனந்தாள் : ஆடுதுறை நிலையத்திலிருந்து வடக்கே 6 கல். பனை மரம் இக்கோயிலுக்கு உரிய சிறப்பு மரம் ஆதலின், இத்தலம் இப்பெயர் பெற்றது. தாடகை என்னும் அன்பிற் சிறந்த பெண் ஒருத்தி வழிபட்டு அருள் பெற்றதனால், இங்குள்ள கோயில் தாடகைஈச்சுரம் எனப்பெயர் பெற்றது. குங்குலியக்கலய நாயனார் இங்கு வளைந்திருந்த சிவலிங்கத்தை நிமிர்த்தியருளினார். கோயில் திருச்சுற்றில் இரண்டு ஆண் பனைகள் இன்றும் இருந்து வருகின்றன. செஞ்சடையப்பர், பெரியநாயகி. சம்பந்தர் பாடல்.

(41) திருஆப்பாடி : சண்டேசுவரநாயனார், விசாரசருமர் என்னும் அந்தணச் சிறுவராக இருந்து ஆநிரைகளை மேய்த்த தலம். அதனால் ஆப்பாடி என்ற பெயர் பெற்றது. கோயில் மரம் அத்தி. சண்டேசுவரர் பால் சொரிந்து வழிபட்டதனால், சுவாமி பாலுகந்த நாதர் எனப் பெயர் பெற்றார். அம்மை பெரிய நாயகி. அப்பர் பாடல். ஆடுதுறை நிலையத்துக்கு மிக அருகில் உள்ளது.

(42) திருச்சேய்ஞலூர்: இது கும்பகோணம் நிலையத்திலிருந்து 10 கல். திருஆப்பாடி திருப்பனந்தாள் என்னும் இரு தலங்களும் இதற்கு மிக அருகில் உள்ளன. சண்டேசுவர நாயனார் அவதரித்த தலம். சூரபதுமனை வெல்லச் சேய் ஆகிய முருகன், திருக்கயிலையிலிருந்து திருச்செந்தூர் சென்ற போது, இது நல்ல ஊர் என்று சிறிது நேரம் தங்கிச் சிவபூசை செய்த இடம். அதனால் சேய்ஞலூர் எனப் பெயர் பெற்றது. சத்தகிரீசுவரர், சகி தேவி. சம்பந்தர் பாடல்.

(43) திருந்து தேவன்குடி : கும்பகோணம் நிலையத்திலிருந்து 5 கல். நண்டு (கர்க்கடம்) வழிபட்டு அருள்பெற்ற தலம். ஆதலின் சுவாமி பெயர் கர்க்கடேசுவரர் என வழங்கப்பெறுகின்றது. கபிலைநிறப் பசுக்களின் பால் பதின்கலம் கொண்டு திருமுழுக்குச் செய்தால், சிவலிங்கத் திருமேனியில் பொன்னிறமுள்ள நண்டின் வடிவம் தோன்றுவதாகக் கூறுவர். அம்பிகை, அருமருந்தம்மை. சம்பந்தர் பாடல்.

(44) திருவியலூர் : கும்பகோணம் நிலையத்திலிருந்து கிழக்கே நான்கு கல். அகத்தியர் இங்குச் சிவராத்திரி தோறும் வழிபடுவதாக ஐதிகம். விரிநீர் வியலூர் என்று சம்பந்தர் பாடியிருப்பதற்கு ஏற்ப, இவ்வூரைச் சுற்றி எங்கும் நீர் நிறைந்துள்ளது. சிவலிங்கத்தில் சடைமுடிகளின் அடையாளம் காணப்படுகிறது. யோகாநந்தர், சாந்தநாயகி. சம்பந்தர் பாடல்.

(45) கொட்டையூர் : கும்பகோணம் நிலையத்திலிருந்து மேற்கே 2 கல். சிவபிரான் ஆமணக்கங் கொட்டைச்செடியின் கீழ்த் தோன்றியதனால், ஊருக்குக் கொட்டையூர் எனப் பெயரமைந்தது. சோழன் ஒருவனுக்கு ஒரு திருவுருவிலேயே கோடி லிங்கமாகக் காட்சியளித்ததனால், கோயிலுக்குக் கோடீச்சரம் என்று பெயர் ஏற்பட்டது. இத்தலத்திற்கு இரண்டு கல்லில் சுவாமிமலை என்னும் முருகன் தலம் உள்ளது. மார்க்கண்டேயர் முதலியோர் வழிபட்ட தலம். கொட்டையூரையும் திரு

வலஞ் சுழியையும் சேர்த்திணைத்து அப்பர் பாடியுள்ளார். கோடீசர், பந்தாடு நாயகி.

(46) திருஇன்னம்பர் : கும்பகோணம் நிலையத்திலிருந்து வடமேற்கே நான்கு கல். அகத்தியர், ஐராவதம் வழிபட்ட தலம். பலா மரமும் சண்பக மரமும் தல மரங்கள். அம்மை சந்நிதிகள் இரண்டு உள்ளன. பூங்குழலம்மை, கொந்தார் பூங்குழலி. ஐராவத தீர்த்தம். இறைவன் கீழ்க்கணக்கராக வந்து, கோயிலின் திருப்பணிக் கணக்கை அரசனுக்குப் படித்துக் காட்டி ஏற்பித்தார் என்பது வரலாறு. ''எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே'' என்பது தேவாரம். சம்பந்தர், அப்பர் பாடல். எழுத்தறிநாதர், பூங்கொம்பு நாயகி.

(47) திருப்புறம்பயம் : கும்பகோணம் நிலையத்திலிருந்து 6 கல். மண்ணியாற்றினுக்கும் கொள்ளிடத்துக்கும் இடையில் உள்ள தலம். பிரளய கால வெள்ள நீர் இக்கோயிலின் மதிலுக்குப் புறம்பாகவே நின்றதனால், இப்பெயர் பெற்றது. (புறம்பு + அயம். அயம் - நீர்). பாம்பு கடித்து இறந்த காதலனை எழுப்பி, ஒரு பெண்ணுக்குச் சம்பந்தர் இறைவனின் சாட்சியாக இங்குத் திருமணம் புரிந்து வைத்தார். அதனால் இறைவனுக்குச் சாட்சிநாதர் என்பது பெயர். தலமரம், புன்னை. அதனால் சுவாமிக்குப் புன்னைவனநாதர் என்றும் பெயர் வழங்கும். இங்குத் தட்சிணாமூர்த்தி சந்நிதியும், சட்டைநாதர் சந்நிதியும் சிறப்பு மிக்கவை. விநாயகர் வெண்மை நிறம் உடையவர். சாட்சி நாதர், கரும்படு சொல்லம்மை.

(48) திருவிசயமங்கை : கும்பகோணத்திற்கு அருகில் உள்ள சுந்தரப் பெருமாள் கோயில் நிலையத்திலிருந்து 4 கல். பஞ்சபாண்டவர்களுள் ஒருவனாகிய விசயன் வழிபட்டதனால், இது விசயமங்கை எனப் பெயர் பெற்றது. மங்கலம் எனும் சொல் மங்கை என மருவியுள்ளது. சம்பந்தர், அப்பர் பாடல். விசயநாதர், மங்கைநாயகி.

(49) திருவைகாவூர் : சுந்தரப் பெருமாள் கோயில் நிலையத்திலிருந்து 5 கல். நந்திகள் கூற்றுவனைத் தண்டித்தற் பொருட்டுத் திரும்பி அமைந்துள்ளன. தல மரம், வில்வம். இங்குள்ள அறுமுகக் கடவுள் வடிவம், அழகு மிக்கது. சம்பந்தர் பாடல். வில்வவனநாதர், வளைக்கை நாயகி.

(50) திருவட குரங்காடுதுறை : அய்யம் பேட்டை நிலையத்திலிருந்து 4 கல். நடராசர் சிவகாமியம்மை படிமங்கள், கல்லால் அமைந்து உள்ளன. சூல் (கர்ப்பம்) கொண்ட பெண் ஒருத்தியின் நீர் வேட்கை தீர்க்க, இறைவன் தென்னங் குலையை வளைத்துக் கொடுத்தான். அதனால் இறைவனுக்குக் குலைவணங்கு நாதர் எனப் பெயரமைந்தது. ''நீலமா மணி நிறத்து அரக்கனை இருபது கரத்தொடு ஒல்க வாலினால் கட்டிய வாலியார் வழிபட மன்னு கோயில்'' என்ற தேவாரப் பாடலின்படி, வாலி வழிபட்ட தலம். அதனால் குரங்காடுதுறை எனப் பெயர் ஏற்பட்டது. சம்பந்தர் பாடல். குலை வணங்குநாதர், அழகுசடை முடியம்மை.

(51) திருப்பழனம் : இது தஞ்சாவூர் நிலையத்திலிருந்து கிழக்கே 10 கல். இதற்குக் கதலிவனம் என்று ஒரு பெயரும் உண்டு. திருவையாற்றிற்குக் கிழக்கே 2 கல். அப்பூதியடிகள் நாயனார் வாழ்ந்த திங்களூர் இதற்கு மிக அருகில் உள்ளது. சம்பந்தர், அப்பர் பாடல். புரட்டாசி பங்குனி ஆகிய இரண்டு மாதங்களின் முழுநிலா நாட்களில், சிவலிங்கத்தின் மீது சந்திரனின் நிலவு வெளிச்சம் படிகின்றது. ஆபத் சகாயர், பெரிய நாயகி.

(52) திருவையாறு : தஞ்சாவூர் நிலையத்திலிருந்து வடக்கே 8 கல். திருநாவுக்கரசர் திருக்கயிலைக் காட்சி பெற்ற திருத்தலம். இவ் விழா ஆடி அமாவாசையில் நிகழும். சித்திரா பௌர்ணமியை ஒட்டி இங்கு ஏழூர் (சப்த ஸ்தானம்) திருவிழா நடைபெறுகிறது. திருநந்தி தேவர் வழிபட்ட தலம். அந்தணச் சிறுவன் ஒருவனைக் கூற்றுவனிடமிருந்து மீட்ட ஆட்கொண்டார் சந்நிதியில், எப்பொழுதும் குங்குலியப் புகை கமழும். சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடல். ஐயாறப்பர், தருமாம்பாள். பஞ்சநதீசுவரர், தர்மசம்வர்த்தனி.

(53) திருநெய்த்தானம் : தஞ்சாவூர் நிலையத்திலிருந்து 9 கல். இது தில்லைத்தானம் என மருவி வழங்குகின்றது. திருவையாற்றிற்கு மேற்கே ஒரு கல். கலைமகள் பூசித்தது. தென்முகக் கடவுள். நின்ற திருக்கோலம். நெய்யாடியப்பர். வாலாம்பிகை. சம்பந்தர் அப்பர் பாடல்.

(54) திருப்பெரும்புலியூர் : தஞ்சாவூர் நிலையத்திலிருந்து 10 கல். திருவையாற்றிற்கு வடமேற்கே 3 கல். வியாக்கிரபாதமுனிவர் பூசித்த தலம். வியாக்கிரபுரீசர், சௌந்தர நாயகி. சம்பந்தர் பாடல்.

(55) திருமழபாடி : புள்ளம்பாடி நிலையத்திலிருந்து கிழக்கே 12 கல். திருவையாற்றிற்கு மேற்கே 3 கல். இடையிற் கொள்ளிடம் நதி, வடக்கு நோக்கிச் செல்கிறது. தலமரம் பனை. இங்குப் பங்குனித் திங்களில் திருநந்தி தேவருக்குத் திருமண விழா நிகழ்கிறது. சோமாஸ் கந்தர் திருநந்திதேவர் கற் படிமங்கள் உள்ளன. புருடாமிருகம் பிரமனின் உலகிலிருந்த சிவலிங்கத்தினை இங்குக் கொண்டு வந்து நிறுவியது. பிரமதேவன் அதனைப் பெயர்த்து எடுத்துச் செல்ல முயன்றான். அவனால்பெயர்க்க இயலாமல், இறைவன் வைரத் தூண் போல் நிலைபெற்றிருந்தான். அதனால் 'மழபாடி வைரத்தூண்' என்று தேவாரப் பாடல்கள் சிறப்பிக்கின்றன. சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடல். வச்சிரத் தம்பநாதர், அழகம்மை.

(56) திருப்பழுவூர் : அரியலூர் நிலையத்திலிருந்து 7 கல். திருவையாற்றுக்கு வடக்கே 10 கல். தம் தந்தையாகிய சமதக்கினி முனிவர் கட்டளையின்படி, தமது தாயாகிய இரேணுகா

தேவியைக் கொலை செய்த பாவம் தீர, பரசு ராமர் வழிபட்ட தலம். தல மரம் பழு (ஆல) மரம். அதனுல் பழுவூர் எனப் பெயர் பெற்றது. வடமூலநாதர், அருந்தவ நாயகி.

(57) திருக்கானூர் : தஞ்சாவூர்க்கு அருகிலுள்ள பூதலூர் நிலையத்திலிருந்து வடக்கே 7 கல். கொள்ளிட நதியின் வெள்ளத்தால் ஊரும் கோயிலும் மண்மூடி மறைந்துபோயின. கோயில் மட்டும் நூற்றைம்பது ஆண்டுகட்கு முன் அகழ்ந்து கண்டுபிடிக்கப் பெற்றது. சம்பந்தர் அப்பர் பாடல். செம்மேனி நாயகர், சிவ யோக நாயகி.

(58) திருஅன்பில் ஆலந்துறை : லால்குடி நிலையத்திலிருந்து கிழக்கே 5 கல். சம்பந்தர் அப்பர் பாடல்களைக் கேட்பதற்குத் தம் காதுகளைச் சாய்த்ததனுல், இங்குள்ள விநாயகர் செவிசாய்த்த பிள்ளையார் எனப் பெயர் பெற்ருர். ஆனுயர் அவதரித்த திருமங்கலம், இவ்வூருக்கு வடக்கே 2 கல்லில் உள்ளது. தல மரம் ஆலமரமாதலின் ஆலந்துறை எனப்பெயர் பெற்றது. அன்புக்கு நிலைக்களமான இல்லமாக விளங்குதலால், அன்பு இல் என்று ஊருக்குப் பெயர் ஏற்பட்டது. சத்தியவாக்கீசுவரர், சவுந்தரநாயகி.

(59) திருமாந்துறை : பிட்சாண்டார் கோயில் நிலையத்திலிருந்து வடகிழக்கே 3 கல். சூரியன் சந்திரன் கண்ணுவ முனிவர் ஆகியோர் வழிபட்ட தலம். மாமரம் கோயிலுக்கு உரிய சிறப்பு மரமாதலின், மாந்துறை எனப் பெயர் பெற்றது. சம்பந்தர் பாடல். மாந்துறை நாதர் (ஆம்பிரவனநாதர்), அழகம்மை.

(60) திருப்பாற்றுறை : திருவரங்கம் நிலையத்திலிருந்து 5 கல். மார்க்கண்டேயர் வழிபட்டது. மார்க்கண்டேயரின்சிவபூசைக்குப் பயன்படும்படி, பால் பெருகுமாறு செய்த தலமாதலின், பாற்றுறை எனப் பெயரமைந்தது. சம்பந்தர் பாடல். திருமூலநாதர், மோக நாயகி.

(61) திருவானைக்கா : திருச்சிக்கும் திருவரங்கத்திற்கும் அருகில் உள்ள சிவத் தலம். சம்புக முனிவர் வழிபட்டதனுல் சம்புகேசுவரம் எனப் பெறும். வெள்ளை யானையும் சிலந்தியும் பூசித்த தலம். இச் சிலந்தியே கோச்செங்கட் சோழ நாயனுராகப் பிறந்தது என்பது பெரிய புராணம். பஞ்ச பூதத் தலங்களுள் அப்புத் தலம். இங்குள்ள திருநீறிட்டான் மதில் மிக்க புகழ் வாய்ந்தது. சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடல். செழுநீர்த் திரள் நாதர் (சம்புகேசுவரர்), அகிலாண்ட நாயகி.

(62) திருப்பைஞ்ஞீலி : திருச்சிக்கு அருகிலுள்ள பிட்சாண்டார் கோயில் நிலையத்தில் இருந்து 3 கல். பைஞ்ஞீலி என்னும் பச்சை வாழை, தலமரமாதலால் இப்பெயர் பெற்றது. திருநாவுக்கரசருக்குச் சிவபெருமான் பொதி சோறு கொணர்ந்து ஊட்டிய தலம். அம்மைக்கு இரு சந்நிதிகள் உள்ளன. சம்பந்தர், அப்பர் பாடல். நீலகண்டர், விசாலாட்சியம்மை.

(63) திருப்பாச்சில் ஆச்சிராமம் : பிட்சாண்டார் கோயில் நிலையத்திலிருந்து 3 கல். தலமரம் வன்னி. இப்போது திருவாசி என வழங்குகிறது. கொல்லிமழவன் மகளுக்கு உற்ற முயலகன் என்னும் நோயைச் சம்பந்தர் தீர்த்தருளிய தலம். அதனுல் இங்கு நடராசப் பெருமானின் திருவடிக்குக் கீழ் முயலகன் இல்லை. சுந்தரர் இறைவன்பால் பொன் பெற்ற தலங்கள் ஆறனுள் ஒன்று. நடராசர் திருவடியின் கீழ்ப் பாம்பு உருவம் உள்ளது.(புஜங்க நடனம்). சம்பந்தர் சுந்தரர் பாடல். சுந்தரருக்குத் தாம் கொடுத்தபொன்னை மாற்றுரைத்துக் கொடுத்து ஏற்பித்ததனுல், சுவாமிக்கு மாற்றறிவரதர் எனப் பெயர். அம்பிகை, பாலசுந்தரி.

(64) திருஈங்கோய்மலை : குளித்தலை நிலையத்திலிருந்து 7 கல். முசிரி பேருந்து நிலையத்திலிருந்து 2 கல். அகத்திய முனிவர் ஈ வடிவாய் வழிபட்ட தலம். அதனுல் இப்பெயர் பெற்றது. இப்போது திருவிங்கநாதமலை என வழங்குகிறது. நக்கீரர் பாடிய திருஈங்கோய் மலை எழுபது என்னும் நூல், பதினொன்ரும் திருமுறையில் மிகவும் சுவை வாய்ந்த இனிய நூல். திருக்கடம்பந்துறை, திருவாட்போக்கி, திருஈங்கோய்மலை என்னும் மூன்றும் மிக அருகில் உள்ளன. ''காலைக் கடம்பர், மதியச் சொக்கர், மாலை ஈங்கோய்நாதர்'' என்பது பழமொழி. இம்மூன்று தலங்களையும் ஒரே நாளில் தரிசித்தல் சிறப்பு என்பர். சம்பந்தர் பாடல். சுவாமி மரகதாசலர், மரகதாம்பிகை. கற்பூரங் காட்டும்போது, அது சிவலிங்கத் திருமேனியில் மிக்க பேரொளியுடன் அழகுறத் தோன்றுவது, இத் தலத்தின் தனிச் சிறப்பாகும்.

—ஆசிரியர்



# அட்டமாசித்தி அண்ணல் கோயில்

திரு. ர. குமரேசன்
பட்டமங்கலம், முகவை

உலகில் மாந்தர் சிறப்போடும், சீரோடும் வையத்துள் வாழ்வாங்கு வாழ இறையருள் இன்றியமையாதது. நமது பாரதம் இத்திருவருளில் திளேக்கின்றது. அன்பைப் பொழிகின்றது. ஆக்கம் பெறுகின்றது. ஆன்மாக்கள் தம்மை மறந்து அருளிலே லயிக்கும்போது திருநிலேயாகுகின்றன. அப்புனித இடங்கள் திருக்கோயில்களாகப் பரிணமிக்கின்றன. இத்திருக்கோயில்களிலே ஒன்றெனச் சிறப்பது, பட்டமங்கலம் அருள்மிகு மீனுட்சி உடனுறை சுந்தரேசுவரர் கோயில் அல்லது அட்டமாசித்தி அண்ணல் கோயில் என்பதாகும். இக்கோயிலின் சிறப்புகளேச் சிந்திப்பது நன்று.

## இருப்பிடம்:

இத் திருக்கோயில், திருப்புத்தூர் வட்டத்தில் (இராமநாதபுரம் மாவட்டம்) ஆழ்வார்களால் மங்களாசாசனம் பெற்ற திருக்கோட்டியூருக்குக் கீழ்பால் மூன்று கல் தொலேவில் பட்டமங்கலம் என்னும் ஊரில் உள்ளது. காரைக்குடி, திருப்புத்தூர், சிவகங்கை, மதுரை முதலிய இடங்களிலிருந்து வருவதற்குப் போக்குவரத்து வசதிகள் உண்டு. இத்தலம் தொன்மை மிக்கது. பழுவூர்ப் பதி என்ற சிறப்புப் பெயரும், பண்டைக் கால மக்களின் அணிகலன்களும், செங்கற்களும் மட்பாண்டங்களும், முதுமக்கள் தாழிகளும், இங்கு வாழ்ந்த மக்களின் நாகரிகத்தையும், வேலேப்பாடு மிக்க நந்தி, சதுரலிங்கம் சண்டீச்சுவரர் போன்ற தெய்வப் படிமங்களின் சிற்ப வேலேப்பாடுகள் இவர்களின் தெய்வ நலனேயும் பண்பாட்டையும் விளக்குபவைகளாக உள்ளன. மேலும் பாலி போன்ற மொழியினுல் வரையப்பட்ட கல்வெட்டுக்களும் விரிவான ஆராய்ச்சிக்கு வித்திடுகின்றன.

## தலம்:

ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெரும் சோதியான சிவத்தின் அறுபத்து நான்கு திருவிளேயாடல்களில், முப்பத்து மூன்றும் திருவிளேயாடலாக, பண்டு சரவணத்தின் முருகப் பெருமானே வளர்த்த கார்த்திகைப் பெண்களான இயக்க மாதர் அறுவரின் சாபம் போக்கி, அவர்களுக்கு அட்டமா சித்திகளே உபதேசித்தருளிய தலம் இதுவே ஆகும்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் முப்பெரும் சிறப்புக்களேக் கொண்டு மணி முத்தாற்ருல் வளம் பெற்றது. கவின்பெறு வனப்பும் கலேயழகும் ஒருங்கு பெற்ற அடக்கமான இவ்வாலயம், காண்போர் உள்ளத்தைக் கவரும் அருட் காந்த சக்தியாக, ஆன்மாக்களே வலித்திழுக்கும் அருட் பெரும் சக்தியாக விளங்குகின்றது. ஐந்து நிலே அரச கோபுரமும், திருநந்தவனமும், நன்மையுற அமைக்கப் பெற்ற படிநிலேகளேயுடைய திருப்பொற்ருமரைப் பொய்கையும், அழகிய நீராழி மண்டபத்துடன் கூடிய தெப்பக் குளமும், பல்வேறு தொகுதி மரங்களும், தெய்வ நலம் தரும் தல விருட்சமும் அழகுபடுத்துகின்றன. சித்தி விநாயகர் மண்டபமும், தட்சிணுமூர்த்தி மண்டபமும், பரிவார தேவதைகள், உற்சவ மூர்த்திகளின் சிற்ப நலம் பெற்ற செப்புத் திருவுருவங்களும், மனத்திற்கு மகிழ்ச்சி தருவன. இத் தலம் திருவாசகம் கீர்த்தித் திருவகவலில்,

''பட்ட மங்கையிற் பாங்காய் இருந்து அங்கு
அட்டமா சித்தி அருளிய அதுவும்''

என்று புகழப்படுகின்றது. திருவிளேயாடற் புராணம், ''பட்டமங்கைப் பழுமர முதல்'' என்றும், திருவாலவாயுடையார் திருவிளேயாடற் புராணம், ''சீருடைப் பட்டமங்கலம் என்னும் பதி ஒன்றுண்டு'' என்றும், திருவிளேயாடற் போற்றிக் கலிவெண்பா ''பட்ட மங்கை பாறையுரு'' என்றும், கடம்பவன புராணம் ''தென்ருட்டிற் பட்டமங்கலத்துக் கீழ் வீழ்ந்து உரனுறு கல்லாகிக் கிடந்தீர்'' என்றும், இத்தலம் பாடல் பெறுகின்றது. வேம்பத்தூரார் திருவிளேயாடற் புராணமும், வடமொழி ஆலாசிய மான்மியமும் இதன் சிறப்பியல்பை உணர்த்துகின்றன.

## தலவிருட்சம்:

இத்தலத்தில் மிகத் தொன்மையும் புனிதமும் வாய்ந்த ஆலமரம் ஆழ்ந்து, அகன்று, தழைத்து உயர்ந்து பரவிப் பன்னூற்றுண்டுகளாகத் தெய்வத் தன்மையுடன் விளங்குகின்றது. ''இட்டகோடி யோசனே போந்து விண்மிசைமுட்டும் ஓர் வடதரு'' என்று திருவாலவாயுடை யார் திருவிளேயாடல் புராணத்

தால் சிறப்பிக்கப்படுகிறது. இதில் சித்தர்களும் முத்தர்களும் இலைகளாகவும் சருகுகளாகவும் இருந்து தவம் செய்கின்றனர் என்பது நம்பிக்கை.

**மூர்த்தி:**

பருவ வடிவம் பலவாய்த் திருமேனி காட்டி ஆட்கொள்ளும் பேரிறைவன் ஆன்மாக்களுக்குப் போகம் அருளி அனுக்கிரகிக்கப் போகமூர்த்தியாய் எழுந்தருளுகின்றார். தென் திசை நோக்கி வீற்றிருந்து அருள் செய்யும் யோக மூர்த்தி, இங்குக் கீழ்த் திசை நோக்கியிருந்து அருள் புரிவது அற்புதமானது. அக இருளை அகற்ற ஞானபானுவாக அட்டமாசித்தி அண்ணல்-''அட்டமாசித்தி தட்சிணாமூர்த்தி'' என்ற திருப்பெயரோடு விளங்குகின்றார்.

உலகமாகிய பாறை—இதனோடியைந்த உலக வாழ்வாகிய ஆல விருட்சம். பாறையோடு ஒன்றிச் சனகாதி முனிவர்கள் ஞானத்தில் இருக்கிறார்கள். இவர்களுக்கும் மேலாகத் திருமால் பன்றி உருவாகவும். பிரம்மன் அன்ன வடிவாகவும் தேடும் பிரபஞ்ச நிலை. வலிந்திழுக்கும் பரிசமாகிய மென்மைத் திருவடி. வீராசனம், மோகனமளிக்கும் மதிமுகம், முக்கண்கள், புன்னகை தவழும் சிவந்த திருவாய், அடர்ந்து நீண்டு தவழும் செஞ்சடைத் திருமுடி, பிறைமதி, கொன்றை, நான்கு திருக்கரங்கள், வலது மேற்கரத்தில் தீயும், வலது கீழக்கரத்தில் ஞான முத்திரையும், இடது மேற்கரத்தில் நாகமும், இடது கீழ்க்கரம் தொடையில் பொருந்தவும் முயலகனை அடக்கி அருள் செய்யும் திருவடியும், கொண்டதுதான் அருள் நிதி தரவரும் ஆனந்த மலையின் திருத்தோற்றம், திருப்பொலிவோடு விளங்குகின்றது.

தாவு இல் கொள்கைத் தம் தொழில் முடிமார் மனன் நேர்பு எழுதரும் வாள்நிற முகன் இங்கு வேண்டுநர்க்கு வேண்டியாங்கு அருளுகின்றான். மண்ணகத்து மணவாளனைத் தேடும் மங்கையர்கள் இந்த வாள்நுதற் கணவனையே வலம் வருகின்றனர். இங்கு இட்ட சித்தி அடைதல் ஏராளம். உமாதேவி காளி வடிவம் நீங்கத் தவம் செய்து சௌந்தரி ஆனாள். கதம்ப மகரிஷி வழிபட்ட இடம்.

இத்திருக்கோயில் தவத்திரு. அடைக்கப்ப சுவாமிகளால் 1930-ஆம் ஆண்டு கல் திருப்பணிகள் செய்விக்கப் பெற்று, கும்பாபிஷேகம் நடைபெற்றது. திரு. அ. வீர. அ. வீரப்ப செட்டியார் தம் வழிமுறையினரால் கோயில் நிர்வாகம் நன்கு நடைபெறுகின்றது. இத் திருக்கோயிலை அன்பர்கள் தரிசித்துப் பேருவகையும், பெரும் சிறப்பும் பெற்றுப் பெரு வாழ்வு வாழ வேண்டுகின்றேன்.







# கந்தபுராணக் காப்பிய நலம்

"திருக்குறள்மணி"
திரு. க. த. திருநாவுக்கரசு அவர்கள், M.A., M.Litt.,
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-20.

(முற்றொடர்ச்சி)

யாப்பமைதி:

கருத்தினை உணர்த்தச் செய்யுள் கருவியாகப் பயன்படுகிறது. இக் கருவியின் வடிவமாக விளங்குவது பா அமைப்பாகும். எழுத்து, சீர், தளை, அடி, தொடை, வண்ணம் போன்ற பல் வகை உறுப்புக்களைக் கொண்டு, தம் உணர்ச்சி களை வெளிப்படுத்துவதற்கேற்ற பாவினைப் பாவலன் பயன்படுத்துவது மரபு. தமிழில் தோன்றிய முதற் காப்பியங்கள், பெரிதும் ஆசிரியப்பாவையே பயன்படுத்தின. காலப் போக்கில் கலிப்பாவின் வகைகள் செல்வாக் குற்றன. ஆழ்வார்களும் நாயன்மார்களும் புதியதாகக் கிளைத்தெழுந்த விருத்தப்பாவினைக் கையாண்டனர். விருத்தத்தின் நெகிழ்ச்சியும் ஒலிநயமும் பாமர மக்களின் கருத்தையும் கவரத்தக்கனவாய் அமைந்தன. செய்யுள் யாப்பதில் உண்டான புதுமைப் பரிசோதனை முறைகள், நாளடைவில் வெற்றிமிகு யாப்பு நெறியாக அமைந்தன. அதைக் கண்ட காப் பியக் கலைஞர்கள், இப்புதுமைப் போக்கினைத் தழுவலாயினர். திருத்தக்க தேவருடைய இலக்கியப் பட்டறையில் வனப்புமிகு புதிய விருத்தப் பாவகைகள் வார்க்கப்பட்டன. பின்னர் வந்த தோலாமொழித் தேவரும், சேக்கிழாரும், கம்பரும் தங்கள் தேவைகளுக்கு ஏற்றவகையில் விருத்தத்தினை விரிவுபடுத்திக் கொண்டனர்.

இம்மரபினை அடியொற்றிக் கந்தபுராண ஆசிரியரும் விருத்த யாப்பினையே, தம் நூலிற் குகந்த யாப்பாகக் கொண்டுள்ளார். இதனைப் பாயிரப் பகுதியில்

''பாக்க ளினத்தினுள் மிகுதி கொண்ட
விருத்தத் தொகைகளால் தனிக்கதை சாற்றுகேன்''

என்று அவர் சுட்டிச் செல்லுகிறார். அறுசீர் விருத்தமே பேரளவில் இந்நூலில் இடம்பெற் றுள்ளன. இதற்கு அடுத்துக் கலிவிருத்தம் அமைகிறது. உணர்ச்சிப் போக்கில் உண்டாகும் மாற்றத்தைப் புலப்படுத்தும் வகையில் சந்தப் போக்கும் மாறுவது கலிவிருத்தங்களால் வெளிப் படுகிறது. கலித்துறைப் பாடல்களும் கந்த புராணத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளன. எழுசீர் ஆசிரிய விருத்தம் இருபதுக்குக் குறைவாகவே காணப்படுகிறது. ஆனால், எண்சீர் ஆசிரிய விருத்தம் இதனினும் மிகவும் அருகியே வழங்கப்பட்டுள்ளது.

இவற்றோடு தாழிசையையும் கச்சியப்பர் உணர்ச்சித் துடிப்புமிக்க பகுதிகளில், ஒலிநய வேற்றுமையைப் புலப்படுத்தும் வகையில் அருகிய வழக்காகப் பயன்படுத்துகிறார். தாழி சையுள், அவர் பெரிதும் குறள் தாழிசையையே விரும்பிப் போற்றுகிறார். இதனைப் போர்க்கள வருணனையில் மட்டுமே பெரிதும் கையாண்டுள் ளார். தேவகாண்டத்தில் விண்குடியேற்று படலத்தில் மாளிகை அமைப்பைச் சுட்டிடவும் இதைப் பயன்படுத்துகிறார்.

மகேந்திர காண்டத்து யாளிமுகன் வதைப் படலத்திலும் *(10-15)*, யுத்த காண்டத்துப் பானுகோபன் வதைப்படலத்திலும் *(4:11: 45-56)*, சூரபன்மன் வதைப்படலத்திலும் *(4:13:41-118; 184-190)* குறள்தாழிசைச் செய்யுள்கள் சிலவற்றை (60) ஆசிரியர் நய முறப் பயன்படுத்தியுள்ளார்.

வட்டணை கொண்டிடு மால்வரையும்
எட்டெனும் ஓங்கலும் யானைகளும்
பட்டுருவிக் கணை மாறியவால்
ஒட்டலர் எங்ஙனம் உய்குவதே

பொன்னுல கெல்லையும்பு குந்துலவும்
அன்னம் உயர்த்திடும் அண்ணல்பதந்
துன்னுறும் அச்சுதர் தொல்லுலகின்
மின்னென வேசெலும் வேற்கணையே

*(4 : 13 : 91—29)*

இத்தாழிசைச் செய்யுள்கள் இன்னோசை பொருந்திய ஒலிநயத்தோடு, கதை நிகழ்ச் சியை நம் கண்முன்னர்க் கொண்டு வந்து நிறுத்துகின்றன. இத்தாழிசையால் பரணிநூல் களின் சந்தக் குழிப்பும் கவிதை இன்பமும் மிகுந்துள்ளதைக் கண்டு, போர்க்காட்சிகளில் இதனைச் சிறப்பாக ஆசிரியர் பயன்படுத்தியுள் ளார் எனக் கருத இவை இடம் தருகின்றன.

கதைப்போக்கில் உண்டாகும் மாற்றத்தை வேறுபடுத்திக் காட்டவும், உணர்ச்சிக் கொந் தளிப்பை உணர்த்தவும் ஆசிரியர் நூலின் இடை யிடையே யாப்பினை மாற்றி அமைத்துள்ளதை மிகுதியாகக் காணுகின்றோம். இதை உணர்த்து வதற்கு, ஆசிரிய விருத்தத்திற்கு இடையே கலி விருத்தம் அல்லது கலித்துறை யாப்புப் பெரி தும் பயன்படுத்தப்படுகிறது. இவ்வகையில் கச்சியப்பர் கைதேர்ந்த கலைஞராகக் காட்சி தருகிறார்.

போர்க்களத்தில் பானுகோபன் படு தோல்வி அடைகிருன். அவனுடைய பெரும் படை சிதறுண்டு போகிறது. இதை உணர்ச்சித் துடிப்போடு ஆசிரியர் அறுசீர் விருத்த யாப்பில் ஓசைநயம் தோன்றப் பாடுவதைக் காண்போம்:

பட்டன புரவிப் பந்தி;
படிந்தன முடிந்த வேழம்;
கெட்டனர் அவுணர் யாரும்;
கிடந்தன ஓடிந்த திண்டேர்;
விட்டனன் ஒருவன் நின்ருன்;
அகலிரு விசும்பை வல்லே
தொட்டன பிணத்தின் பொம்மல் ;
சோரியா றெழுகிற் றன்றே

(4 : 3:313)

திருமணக் கோலம் பூண்ட தெய்வயானை, மணப்பந்தலுக்கு அழைத்து வரப்படுகிருள். புதுமணப்பெண் நாணிக்கோணி, பையப்பைய அடியெடுத்து வைத்து, அன்னநடை பயின்று வருகிருள். இதை

கல்லுயர் பொருப்பினிடை காமரடி செல்ல
வல்லுநகொல் என்றுமணி நூபுரம் அரற்ற
மெல்லிடை வருந்துமென மேகலை இரங்க
எல்லவரும் உள்மகிழ எம்அனை நடந்தாள்

(5 : 2 230)

எனக் கச்சியப்பர் கருத்தைக் கவரும் ஒலிநயத் தோடு அமைத்துக் காட்டுகிருர். இங்கு, நுட்பமான மென்மைமிகு ஒலிநயத்தைப் புலப்படுத்த ஆசிரியர், நாற்சீரடி நான்காய் முடியும் கலிவிருத்தத்தைப் பயன்படுத்தியு ள்ளமை பாடி இன்புறத்தக்கதாகும்.

தொகுப்புரை:

இதுவரையில் கண்ட காப்பியப் பண்புகள் யாவும், பொதுவாகத் தமிழ் மொழியில் உரு வான காப்பியக் கொள்கையின் நோக்கையும் போக்கையும் அறிய உதவுகின்றன. அப் பொழுது மரபில், கச்சியப்பர் புகுத்தியுள்ள புதுமைப் போக்குகளை நாம் எளிதில் இனங் கண்டறிய இயலுகிறது. அவை:

1. வள்ளிபற்றிய பண்டைத் தொன்மத் திற்குப் புது வடிவம் தருதல்.

2. வடமொழி நூலினைத் தழுவியபோதி லும், பல வட்டார (தமிழக)ப் பண்புகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் முதன்மை இடம் கொடுத் தல்.

3. புராண நூல்களின் சில பண்புகளைக் காப்பியத்தில் புகுத்தல்.

(4). எண்ணற்ற பழங்கதைகளை மூலக் கதையோடு இணைத்தல்.

5. பக்திச்சுவைக்கு மூதன்மை இடம் அளித்தல்.

6. முழுமுதற் கடவுளான இறைவனே முருகப்பெருமானுகத் தோன்றினுன் என்பதை அறிவுறுத்துதல் என்பனவாகும்.

நாடகப்பண்புகள் நிறைந்த சிலப்பதி காரத்தை, நாடகக் காப்பியம் (Dramatic Epic) எனப்போற்றுகிறோம். காப்பியப் பண்புகள் மிகுந்த மனேன்மணீயத்தைக் காப்பிய நாடகம் (Epic Drama) எனப் பாராட்டுகிறோம். இவற் றைப் போன்று, புராணத்தின் பண்புகள் சில வற்றைக் கொண்ட கந்தபுராணத்தைப் புராண காப்பியம் எனப் போற்றுதல் பொருந்தும்.

---

# திருவல்லிக்கேணி வாழ் திருவே!

—: கவியரசு கண்ணதாசன் அவர்கள் :—

''வானமா வரையில் நீளுமா றுடலை
வளர்த்ததோர் மாதவத் தரசே!
ஞானமா மணியே! கீதைமா முனியே!
நல்லவர் உளத்தினுக்(கு) அணியே!
மானமா உயிரா என்னுமா றிருந்த
மன்னவர் பாண்டவர் துணையே!
தேனமர் சோலைத் திருவிழாக் கோயில்
திருவல்லிக் கேணிவாழ் திருவே''

[திருவல்லிக்கேணி அருள்மிகு பார்த்தசாரதிசுவாமி திருக்கோயிலுக்குத் தமிழக அரசின் அரசவைக் கவிஞர், திரு. கவியரசு கண்ணதாசன் அவர்கள், 24-6-78 அன்று வருகை தந்தபோது பாடிய கவிதை இங்கு வெளியிடப் பெறுகின்றது.
—ஆசிரியர்]

# தொல்காப்பியத்தில் தத்துவநெறிக் கொள்கைகள்

பேராசிரியர் திரு. க. வெள்ளைவாரணர் அவர்கள்,
(தமிழ்த்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்)

இவ்வுலகில் உடம்போடு காணப்பெறும் புல் முதல் மக்கள் ஈறுகவுள்ள உயிர்த் தொகுதிகளின் இயல்புகளையும் நில முதலிய உயிரில் பொருள்களின் உண்மைத் தன்மையினையும் உலகுயிர்களின் இயக்கத்திற்குச் சார்பாயுள்ள முழு முதற் பொருளின் உண்மையினையும் உள்ளவாறு உணர்ந்து பயன் கொள்ளும் முறையில் நம் முன்னோர் தமது நுண்ணிய அறிவின் திறத்தாலும் அழுந்தியறிதலாகிய அநுபவத்தாலும் ஆராய்ந்துணர்த்திய வாழ்வியல் நெறிமுறைகளை அறிவுறுத்தும் முறையில் அமைந்த நூல்கள் மெய்ந்நெறி நூல்களாகும். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இத் தமிழகத்தில் தோன்றி இடைச் சங்கத்தார்க்கும் கடைச் சங்கத்தார்க்கும் இலக்கண நூலாக அமைந்த செந்தமிழ்த் தொன்னூலாகிய தொல்காப்பியத்தில் நம் தமிழ் முன்னோர் இவ்வுலகியல் வாழ்வின் அடிப்படையினை உள்ளவாறு உணர்ந்து ஐயத்தின் நீங்கித் தெளிந்து மெய்யுணர்வு பெற்ற நிலையில் அறிவுறுத்திய மெய்ந்நெறிக் கொள்கைகள் பல ஆங்காங்கே இடம் பெற்றுள்ளமை காணலாம்.

மக்களால் மதிக்கத் தகும் பொருள்கள் எல்லாவற்றையும் முதல், கரு, உரி என மூன்றாகப் பகுத்துரைப்பர் தொல்காப்பியர். உயிர் வாழ்க்கைக்கு அடிப்படையாய் அமைந்தன நிலமும் காலமும் ஆதலின் அவை முதற் பொருள் என வழங்கப்பட்டன. புல் முதல் மக்கள் ஈறாகக் காணப்படும் உயிர்ப் பொருள்களும் உயிரில் பொருள்களும் நிலமும் காலமுமாகிய முதற் பொருள்களின் சார்பிற் கருக்கொண்டு தோன்றுவனவாதலின் கருப்பொருள் என வழங்கப்பட்டன. மனவுணர்வுடைய மக்களுக்கே சிறப்புரிமையுடைய அகமும் புறமுமாகிய ஒழுகலாறுகள் உரிப்பொருள் எனப்படும். மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்ப அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வங்கொள்கையும் வழிபாட்டு முறைகளும் தோன்றி நிலைபெறுவனவாதலின் தெய்வங் கொள்கையினையும் கருப்பொருள்களுள் ஒன்றாகவே வைத்து எண்ணினர் தொல்காப்பியனார்.

காடுறை யுலகமாகிய முல்லை நிலத்தில் மாயோன் வழிபாடும், மைவரையுலகமாகிய குறிஞ்சி நிலத்தில் சேயோன் வழிபாடும், தீம்புனலுலகமாகிய மருத நிலத்தில் வேந்தனைத் தெய்வமாக மதித்து வழிபடும் முறையும், பெரு மணலுலகமாகிய நெய்தல் நிலத்தில் வருணன் வழிபாடும் தோன்றி நிலைபெற்ற திறத்தினை 'மாயோன் மேய' (தொல்—அகம்—5) எனவரும் நூற்பாவில் தொல்காப்பியர் வகுத்துரைத்துள்ளார். மாயோன், சேயோன் என நிறம் பற்றித் தெய்வப் பெயர் கூறப்படுதலால் இங்ஙனம் தெய்வங்களுக்குத் திருவுருவமைத்து வழிபடும் வழக்கம் ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திற்கு முற்பட்ட தொன்மையுடைய தென்பது நன்கு புலனாகும்.

தெய்வத்தினை நில வகையால் வகுத்துக் கூறிய தொல்காப்பியனார் நிலப் பாகுபாடின்றி எல்லா நிலத்துக்கும் உரிய நிலையில் எங்கும் நீக்கமற நிறைந்த முழு முதற் பொருளைக் கடவுள் என்ற பொதுப் பெயராற் சிறப்பித்துப் போற்றியுள்ளார். நிலந்தோறும் வேறு வேறு பெயர்களால் உருவமைத்து வழிபடப் பெறும் எல்லாத் தெய்வங்களும் பொருளால் ஒன்றேயென்பது ஆசிரியர் தொல்காப்பியனார் துணிபாதலின், அவர்தம் காலத்தில் நிலந்தோறும் நிகழ்ந்த தெய்வ வழிபாடுகள் எல்லாவற்றையும் ஒத்த மதிப்புடன் தமது நூலிற் குறிப்பிட்டுள்ளார்.

தூய மெய்யுணர்வே இறைவன் திருமேனி என்பதனையும், இறைவன் ஒருவனே என்பதனையும் அம் முதல்வன் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய நம்மைப் போன்று வினைத் தொடக்கிற்படாது இயல்பாகவே விளங்கிய பேரறிவினனாய்ப் பாசங்களின் நீங்கியவன் என்பதனையும்,

'வினையி னீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல் நூலாகும்
(தொல்-மரபு-94)

எனவரும் மரபியல் நூற்பாவில் தொல்காப்பியனார் நன்கு புலப்படுத்துகின்றார். இவ்வாறே தெய்வப் புலவர் திருவள்ளுவனாரும் 'வாலறிவன்' என்ற பெயரால் கடவுளின் இயல்பினை விளங்க அறிவுறுத்தியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்களால் ஆகியதே இவ்வுலகம் என்னும் உண்மையினை 'நிலந்தீ நீர்வளி விசும் போடைந்தும், கலந்த மயக்கம் உலகமாதலின்' (தொல். மரபு 89) எனவரும் தொடரில் தொல்காப்பியனார் தெளிவாகக் குறித்துள்ளார். இத்தொல்காப்பியத் தொடர்ப் பொருளின் நுட்பத்தினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

'சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு' (27)

எனவரும் திருக்குறளாகும். இவ்வாறு நிலம் நீர் முதலாகப் பலவேறு அவயவப் பகுப்புடைய தாய்ப் பொறிவாயிலாகச் சுட்டியறியப்படுந் தன்மை இவ்வுலகின்பாற் காணப்படுதலின் இவ்வுலகம் எக்காலத்தும் ஒரே நிலையில் நிற்கும் நிலைபேறுடையதன்று என்பது உய்த்துணரப் படும். இதனியல்பினை,

'பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே'

(தொல்-புறத். 23)

எனவரும் காஞ்சித் திணைச் சூத்திரத்து 'நில்லா வுலகம்' என்ற தொடரால் தொல்காப்பியனார் அறிவுறுத்தியுள்ளார். ஒன்றோடொன்று தொடர்பு பட்டு இயங்கும் எல்லா அண்டங் களுக்கும் மூலமாகிய நுண்பொருளை 'உலகம்' எனவும், இவற்றின் இயக்கத்திற்கு உறுதுணை யாகிய காலம் என்னும் தத்துவத்தைக் 'காலம்' எனவும், 'காலம் உலகம் உயிரேயுடம்பே' (தொல். கிளவியாக்கம்) எனவரும் சூத்திரத் தில் ஆசிரியர் குறித்துள்ளார். நிலமும் காலமு மாகிய இவை உயிர்களின் வாழ்க்கைக்கு அடிப் படையாகிய முதற் பொருள் என்பதனை,

'முதலெனப் படுவது நிலம் பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே'

(தொல். அகத்-4).

என்பதனால் ஆசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார். இங்கு எடுத்துக் காட்டிய குறிப்புக்களால் உலகம் என்பது இல்பொருளன்று, காலந் தோறும் நிலைமாறுமியல்பினதாகிய உள் பொருளே யென்பது ஆசிரியர் தொல்காப்பிய னார் கொள்கையாதல் நன்கு பெறப்படும்.

கடவுள், உலகம் என்பவற்றின் வேறாக உயிர் என்பதனைத் தனிப் பொருளாகக் கொண்டு அவ்வுயிர்கள் பல என்பதனையும் தொல்காப்பியனார் தெளிவாகப் புலப்படுத்தி யுள்ளார். உயிர்கள் உணருந் தன்மையன என்பதும், என்றும் அழிவில்லன என்பதும் பண்டைத் தமிழர் கொள்கையாகும். உயிர்கள் என்றும் நிலைபேறுடையவாதலின் அவற்றை மன்னுயிர் என வழங்குதல் தமிழ் வழக்கு. இப்பழைய கொள்கையினைத் 'தொல்லுயிர்' என்ற தொடரால் தொல்காப்பியனார் உடன் பட்டு வழங்கியுள்ளார். 'உயிர் எத்தன்மைத்து என்று வினயவழி, உணர்தல் தன்மைத்து என்றல் செவ்வன் இறை' என்பர் சேனவரை யர். எனவே உணருந் தன்மையது எதுவோ அதுவே உயிர் என வழங்கப்படும் என்பது நன்கு விளங்கும். அறியுந் தன்மை என்பது எல்லாவுயிர்க்கும் உரிய பொது வியல்பாகும். உயிர்கள் தாம் பெற்றுள்ள உடம்பின் கூறு பாட்டால் பல திறப்படுவன. உடம்பின்கண் அமைந்த உறுப்புக்களின் குறைவு மிகுதிகளுக் கேற்ப உயிர்களின் உணர்ச்சி வாயில்கள் வேறு படும் நீர்மையன. புல் முதல் மக்கள் ஈறாக வுள்ள அறிவுடைப் பொருள்கள் யாவும் உயிர்த் தொகுதிகளேயாம். உயிர்களின் அறிவு அவை பெற்றுள்ள அறிகருவிகளாகிய பொறிகளின் குறைவு மிகுதிகளுக்குத் தக்கவாறு குறைந்தும் வளர்ந்தும் அமையுந் திறத்தினைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் நுணுகி ஆராய்ந்தனர். அவ்வாராய்ச்சியின் பயனாக எல்லா வுயிர்களை யும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாகப் பகுத் துணரும் தெளிவு பெற்றனர்.

புல்லும் மரமும் என்று சொல்லப்படும் தாவரங்கள் தொட்டால் அறியும் ஊற்றுணர்வு ஒன்றே உடையன ஆதலால் அவை ஓரறிவுயிர்க ளெனப்படும். நத்தை சங்கு சிப்பி முதலியன பிறிதொன்று தாக்கிய நிலையில் உடம்பினால் உற்றறியும் ஊற்றுணர்வும், இரை முதலிய வற்றைச் சுவைத்தறியும் நாவுணர்வும் ஆகிய ஈரறிவுடையன. கரையான் எறும்பு முதலியன முற்கூறிய ஊற்றுணர்வும் சுவையுணர்வும் என்னும் இரண்டுடன் மோந்தறிதலாகிய மூக் குணர்வும் ஒருங்குடைமையால் மூவறிவுயிர் எனப்படும். நண்டு, தும்பி என்பன முற்கூறிய மூவறிவுடன் கண்ணுணர்வும் ஒருங்குடையன வாதலின் நாலறிவுயிர் எனப்படும். விலங்கும் பறவையும் முற்குறித்த நாலறிவுடன் ஓசை யுணர்தலாகிய செவியறிவும் ஒருங்குடைமை யால் ஐயறிவுயிரெனப்படும். முற்குறித்த ஐம் பொறியுணர்வுகளோடு நன்றும் தீதும் பகுத் துணரும் மனவுணர்வும் பெற்றமையால் மக்கள் ஆறறிவுயிர் எனப்படுவர். மேற்குறிப்பிட்ட அறுவகை வுயிர்களுள் இங்கு எடுத்துரைக்கப் பட்டனவேயன்றி, அவற்றின் கிளையினவாகவும் ஒத்த பிறப்பினவாகவும் வருவன பிறவும் உள. இவ்வாறு காணு மரபினவாகிய உயிர்த் தொகுதி களைக் காணப்படும் உடம்புகளாற் கண்டுணர்ந்து அவை பெற்றுள்ள உடம்புகளில் அமைந்த அறிகருவிகளின் வாயிலாக அவற்றை ஆறு வகையாகப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் பகுத்த முறையினைத் தொல்காப்பிய மரபியலில் 'ஒன்றறிவதுவே யுற்றறிவதுவே' என்பது முதலிய ஏழு நூற்பாக்களால் தொல்காப்பிய னார் விரித்துக் கூறியுள்ளார்.

உணர்வும் இயக்கமும் உடையனவாய் அருவாயுள்ள உயிர்களும் உணர்வும் இயக்கமும் இன்றி, உருவாகிய உடம்புகளும் தம்முள் வேறு பட்ட இருவேறு பொருள்களே என்பதனை 'உடம்பும் உயிரும் வாடியக்காலும்' (தொல். பொருளியல்-8) என வரும் தொடர்களாலும்; உயிர்தான் நின்ற உடம்பினை விட்டுப் பிரிந்து செல்லும் இயல்பினதென்பதனைச் 'சென்றவுயி ரின் நின்ற யாக்கை' (தொல். புறத். 13) என வருந்தொடராலும் தொல்காப்பியனார் தெளி வாகக் குறித்துள்ளார். உயிரும் உடம்பும் வேறு

வேறு பொருள்களாய்த் தம்முட்கூடியும் பிரிந்தும் நிகழும் உலகியல் நிகழ்ச்சிகளைக் கூர்ந்துணர்ந்த பண்டைத் தமிழ்ச் சான்றோர்கள், தாம் உணர்ந்த இத்தத்துவ நுட்பத்தினைத் தமது மொழியாகிய தமிழில் எழுத்தமைப்பின்கண்ணும், உயிர் மெய் என முறைப்படுத்திக் காட்டிய திறத்தினைத் தொல்காப்பிய நூன் மரபில் ஆசிரியர் உயிரெனமொழிப, மெய்யென மொழிப, என முன்னோர் கூற்றில் வைத்து உணர்த்துகின்றார். அகரம் முதல் ஔகாரம் ஈறுகிய பன்னிரண்டு எழுத்துக்களும் உலகத்து உடலை இயக்கும் உயிர்போலக் ககர முதலிய ஏனைப் பதினெட்டு எழுத்துக்களையும் இயக்கித் தாம் அவையின்றியும் தனித்தியங்கும் ஆற்றலுடைமை கண்டு அவை பன்னிரண்டினையும் உவம ஆகுபெயரால் உயிர் எனக் குறியிட்டும், உயிரின்றி இயங்காத உடம்பினைப் போல அகரம் முதலிய எழுத்துக்களின் துணையின்றி இயங்காத ககர முதலிய பதினெட்டு எழுத்துக்களையும் ஆகுபெயரால் மெய் எனக் குறியிட்டும் வழங்கிய பண்டைத் தமிழிலக்கண நூலின் தத்துவவுணர்வுடன் கூடிய ஒலி நூலறிவு, உலகத்து எம்மொழியிலுங் காணப்படாத தனிச் சிறப்புடையது என்பதிற் சிறிதும் ஐயமில்லை.

உடம்பினின்றும் உயிரைப் பிரிப்பதொரு தெய்வ ஆற்றல் உண்டென்பதும் அதனை மாற்றும் ஆற்றல் உயிர்கட்கு இல்லை என்பதும் ஆகிய உண்மையினை 'மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை' (தொல். புறத். 19) என்ற தொடராலும், இவ்வுலகில் உடம்பொடு கூடி வாழ்ந்தார் பலரும் மாய்ந்தொழியத் தான் மட்டும் மறையாது நின்று யாக்கை நிலையாமையை விளக்கும் அடையாளமாக எஞ்சி நிற்பது புறங்காடு மட்டுமே என்பதனை 'மலர் தலை யுலகத்து மரபு நன்கறியப் பலர் செலச் செல்லாக் காடு வாழ்த்து' (தொல். புறத். 19) எனவரும் துறைப் பொருளாலும் தொல்காப்பியனார் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வாறே 'மன்னுப் பொருட்பிணி' என்பதனால் செல்வ நிலையாமையையும் 'நாளது சின்மையும் இளமையதருமையும் (தொல். அகத். 44) என்பதனால் யாக்கை நிலையாமை, இளமை நிலையாமைகளையும் ஆசிரியர் அறிவுறுத்தியுள்ளமை உணரத் தகுவதாகும்.

இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை எனப் பல்லாற்றாலும் இவ்வுலகம் நிலையற்ற தன்மையது என்பதனை நன்குணர்ந்தவர்கள் இந்நிலையாமை யுணர்வினால் உளம் சோர்வுற்றுத் தாம் செய்தற்குரிய உலகியற் கடமைகளைச் செய்யாது விலகியொழுகுதல் கூடாதென்பதும், நிலையற்ற யாக்கை செல்வம் முதலிய இவ்வுலகியற் கூறுகளைப் பற்றுக் கோடாகக் கொண்டே உயிர்க்கு உறுதி பயக்கும் நிலையுடைய நற்பொருள்களைத் தேடிக் கொள்ளுதல் வேண்டுமென்பதும், இங்ஙனம் உலகியல் வாழ்வில் நேரும் பலவகைத் தடைகளை எதிர்த்து நின்று நில்லாதனவற்றால் தனக்கு ஒப்பில்லாத சிறப்பு என்னும் பொருளைப் பெறுதலே காஞ்சித் திணையாகிய ஒழுகலாறென்பதும் தொல்காப்பியனார் வற்புறுத்தும் மெய்ந்நெறியுண்மைகளாகும்.

'காஞ்சிதானே பெருந்திணைப்புறனே
பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே'

(தொல். புறத். 18).

எனவரும் காஞ்சித் திணைச் சூத்திரத்தால் இவ்வுண்மை இனிது புலனாதல் காணலாம். 'காஞ்சி என்னும் திணை பெருந்திணையென்னும் அகத்திணைக்குப் புறனாகும்; தனக்கு ஒப்பில்லாத சிறப்பென்னுஞ் செம்பொருளைப் பெறுதல் காரணமாக யாக்கை, இளமை, செல்வம் என்பவற்றால் நிலைபேறில்லாத இவ்வுலகியலைப் பற்றி நின்று அதனாலுளவாகும் பலவகைத் துன்பங்களையும் பொறுத்தலாகிய ஒழுகலாறாகும்' என்பது மேற்குறித்த நூற்பாவின் பொருளாகும். எனவே நில்லாதவற்றால் நிலையுடைய சிறப்பினை அடையும் முயற்சியே காஞ்சித் திணையாம் என்பது தொல்காப்பியனார் கருத்தாதல் நன்கு புலனாகும்.

'அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்' (திருக்குறள்-333)

எனவரும் திருவள்ளுவர் வாய்மொழியும், 'எதிரூன்றல் காஞ்சி' என்னும் பன்னிரு படல் ஆசிரியர் கொள்கையும் மேற்குறித்த தொல்காப்பியனார் கருத்தை அடியொற்றி அமைந்தனவாம்.

'காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்
ஆயி ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா உயர்திணை மேன'

(தொல். கிளவி. 58).

எனவரும் நூற்பா, இருதிணை ஐம்பால்களுள் இன்னபால் என விளங்காதன சிலவற்றை யெடுத்துரைத்து உயர்திணைப்பாற்படுத்துவது ஆகும். இந்நூற்பாவில் தமிழ் முன்னோர் தம் வாழ்வியலிற் கண்டுணர்ந்த மெய்ந்நெறிக் கோட்பாடுகள் சிலவற்றை ஆசிரியர் தொல்காப்பியனார் குறித்துள்ளமை காணலாம். காலதத்துவமும் உலகத் தொகுதியும் உயிரும் உடம்பும் பால்வரை தெய்வமும் வினையும் பூதமும் ஞாயிறும் திங்களும் சொல்லும் ஆகிய இப்பத்துடனே இவை போன்று வருவன பிறவுமாகிய பொருள்கள் மேல்வரும் சொற்களெல்லாம் ஐம்பாலுள் இன்னபால் என்று பிரித்து இசையாதனவாய் உயர்திணைப் பொருள்மேல் நிகழ்வனவாம் என்பது இந்நூற்பாவின் பொருளாகும்.

காலம் என்றது காலக்கடவுளை. பால்வரை தெய்வம் என்பது, எல்லார்க்கும் இன்பத் துன்பத்திற்குக் காரணமான இருவினையையும் வகுப்பது. வினை என்பது அறத்தெய்வம். சொல் என்பது நாமகளாகிய தெய்வம் என்பர் சேனாவரையர். 'பால்வரை தெய்வம் என்றார் இன்ப துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையும் வகுத்தலின்.' 'வினை-இருவினைத் தெய்வம்' என்பர் நச்சினார்க்கினியர்.

'காலம் என்பது, முன்னும் பின்னும் நடுவுமாகி என்றும் உள்ளதோர் பொருள், உலகம் என்பது, மேலும் கீழும் நடுவுமாகி எல்லாவுயிருந் தோற்றுதற்கு இடமாகிய பொருள். உயிர் என்பது சீவன். உடம்பு என்பது மனம் புத்தி ஆங்காரமும் பூததன்மாத்திரையுமாகி வினையினாற் கட்டுப்பட்டு எல்லாப் பிறப்பிற்கும் உள்ளாகி நிற்பதோர் நுண்ணிய உடம்பு. இதனை மூலப்பகுதி எனினும் ஆம். பால்வரை தெய்வம் என்பது, பெண்ணும் அலியுமாகிய தன்மையை வரைந்து நிற்கும் பரம்பொருள். வினையென்பது ஊழ். பூதம் என்பது நிலம் தீ நீர்வளி ஆகாயம் ஆகிய ஐம்பெரும் பூதம். ஞாயிறு என்பது தீத்திரளாய் உலகு விளக்குவது. திங்கள் என்பது நீர்த்திரளாய் உலகிற்கு அருள் செய்வது. சொல் என்பது எழுத்தினான் இயன்று பொருள் உணர்த்துவது. அச்சொல்லினான் இயன்ற மந்திரம் விடம் முதலாயின தீர்த்தலின் தெய்வம் ஆயிற்று' என்பது தெய்வச் சிலையார் தரும் விளக்கமாகும். மேற்குறித்தவற்றுள் 'பால்வரை தெய்வம்' என்ற தொடர் இறைவனாகிய முழுமுதற் பொருளைக் குறித்து நின்றது என்பது சேனாவரையர் நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் ஆகிய மூவர்க்கும் உடன்பாடு. இதனையடுத்து வினையெனச் சுட்டப்பட்டது ஊழ்வினை என்பது உரையாசிரியர் பலர்க்கும் ஒத்த முடிபாதலால், அதன் முன்னுள்ள பால்வரை தெய்வம் என்பதற்கும் ஊழ்வினை எனப்பொருள் கொள்ளுதற்கு இடமில்லை. எனவே இந்நூற்பாவிற் கூறப்பட்ட பால்வரை தெய்வம் வேறு, வினைவேறு என்பது நன்கு துணியப்படும்.

ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்
ஒன்றி யுயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே

(தொல. களவு.2)

எனவருங் களவியற் சூத்திரத்தில் பால் என்பதன் இயல்பினையும் அதன் வகையினையும் அதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு நிகழும் தெய்வத்தின் ஆணையினையும் தொல்காப்பியனார் விரித்துரைத்துள்ளார். ஒன்றுவிப்பதும் வேறுபடுத்துவதும் எனப்பால் (ஊழ்) இருவகைப் படுமென்றும், அவற்றுள் ஒன்றுவித்தலால் உயர்ந்தபாலின் (ஊழின்) வழி நிகழும் இறைவனது ஆணையால் உருவும் திருவும் முதலிய நலங்களால் ஒத்த தலைவனும் தலைவியும் ஓரிடத்து எதிர்ப்படுவர் என்றும் மேற்காட்டிய களவியற் சூத்திரம் அறிவுறுத்துகின்றது. இந்நூற்பாவில் இடம்பெற்ற இருவகைப் பால்களுள் ஒன்றுவிக்கும் பாலினை 'ஆகூழ்' எனவும் வேறுபடுத்தும் பாலினைப் 'போகூழ்' எனவும் ஊழ் என்னும் அதிகாரத்துள் திருவள்ளுவர் குறிப்பிட்டு விளக்கியுள்ளார். இக்குறிப்பினை ஒப்பிட்டு நோக்குங்கால் இச்சூத்திரத்தில் 'ஒன்றே வேறே என்று இருபால்' எனத் தொல்காப்பியனார் சுட்டியது ஆகூழ் போகூழ் என்னும் இருவகை ஊழினையே யென்பது இனிது விளங்கும். எனவே 'பால்வரை தெய்வம்' எனவரும் தொல்காப்பியத் தொடர்க்கு' 'எல்லார்க்கும் இன்ப துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது' எனச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் கூறிய பொருளே தொல்காப்பியனார் கருத்துக்கு ஏற்றதாதல் நன்கு துணியப்படும். ஊழ்வினை, தானே வந்து உயிர்களைப் பற்றுந் தன்மையுடையதன்று என்பதும், உயிர்கள் செய்யும் நற்செயல்களும் தீச்செயல்களும் ஆகிய இருவினைகளுக்கு ஏற்ப அவற்றின் பயன்களை வகுத்து நுகர்விக்கும் முதல்வன் ஒருவனுளன் என்பதும் தொல்காப்பியனார் துணிபாகும். 'பால்வரை தெய்வம்' என்னும் இத்தொடர் பால்வேறு, அதனை வரைந்து நுகர்விக்கும் தெய்வம் வேறு என்னும் மெய்ம்மையினைப் புலப்படுத்துவதாகும். தெய்வத்தால் வகுக்கப்பெறும் முறைமையே பால் எனவும் வகையெனவும் ஊழ் எனவும் நூல்களிற் பேசப் பெறுகின்றது. இந்நுட்பத்தினை,

'வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்த லரிது'. (377)

எனவரும் திருக்குறளில் தெய்வப் புலவர் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார். ஊழ்வினை தானே உருவெடுத்து வந்து வினைசெய்தானைப் பற்றி வருத்தும் உணர்வுடையதன்று என்றும், உலகில் எல்லாப் பொருள்களையும் ஒழுங்கு பெற வகுத்து இயக்கி நிற்கும் இறைவனது ஆணையால் வகுக்கப்பெற்ற முறைமைதானே ஊழ் எனப்படும் என்றும் தெளிவுபடுத்தக் கருதிய திருவள்ளுவர் 'வகுத்தான் வகுத்தவகை' என்ற தொடரால் ஊழ்வினையாவது இதுவென விளக்கியுள்ளார். இத்தொடரில் 'வகுத்தான்' என்னும் சொல் உலகியற்றியானாகிய இறைவனைக் குறிப்பது. 'வகுத்தவகை' என்றது அம்முதல்வனால் வகுக்கப்பட்ட நியதியாகிய ஊழினைக் குறிப்பதாகும். பகுத்தது பால் என வழங்கினாற்போல வகுத்தது வகையென்றாயிற்று.

தெய்வத்தின் இயல்பினை விளக்க எண்ணிய தொல்காப்பியனார் 'பால்வரை தெய்வம்' என அடைகொடுத்து ஓதினார். அவ்வாசிரியர் கருத்தினை அடியொற்றி ஊழின் இயல்பினை விளக்கக் கருதிய திருவள்ளுவர் 'வகுத்தான் வகுத்தவகை' என அடை கொடுத்து ஓதினார். எனவே 'பால்வரை தெய்வம்' எனத் தொல்காப்பியனார் கூறியதும் 'வகுத்தான்' எனத் திருவள்ளுவர் கூறியதும் இறைவனையே என்பது இனிது புலனாம். ஓர் உயிர் செய்த வினையின் பயன் பிறிதோருயிரின்கண் செல்லாமல் வினை செய்த உயிரையே அவ்வினையின் பயன் சென்று சேரும்படி வகுத்து நுகர்வித்தல் இறைவனது முறைமையாதலின் 'வகுத்தான்' என்ற பெயரால் கடவுளைக் குறித்தார் திருவள்ளுவர். இங்கு 'வகை' என்றது கடவுளது ஆணையால் வகுக்கப்படும் வினைப் பயனாகிய ஊழினை. ஆசிரியர் தொல்காப்பியனாரும் திருவள்ளுவரும் தெய்வத்தைப் பற்றியும் ஊழைப் பற்றியும் கூறிய இக்கருத்தினை,

'யாழின் மொழிமங்கை பங்கன் சிற்றம்பலத்தான் அமைத்த
ஊழின் வலியதொன்றென்னை ?'

(திருக்கோவையார்-358).

எனவருந் தொடரால், திருவாதவூரடிகள் விளக்கியுள்ளமை இங்கு ஒப்புநோக்கி உணரத் தகுவதாகும்.

**—தொடரும்**

# அந்தண் வடுகூரில் ஆடும் அடிகள்!

[ திரு. புலவர் பாகூர் சு. குப்புசாமி ]

## அறிமுக வாயில் :

தேவார மூவருள் திருஞான சம்பந்தரின் பாடல் பெற்ற திருத்தலங்களுள் திருவடுகூர் என்பதும் ஒன்று. இது நடு நாட்டுத் தலங்களுள் ஒன்றாகக் கருதப்பெறும் சிறப்புக்குரியது. இறைவன் வடுகநாதர் என்றும், இறைவி வடுவகிர்க் கண்ணம்மை என்றும் அழைக்கப்பெறுகின்றனர்.

இதுகாறும் வெளிவந்துள்ள பாடல் பெற்ற திருத்தலங்களைப் பற்றிய குறிப்புரைகளிலும், அத்தலங்களை அடையாளங் காட்டுகின்ற வரைபடங்களிலும், திருவடுகூர் என்பது, புதுச்சேரி மாநிலத்தைச் சேர்ந்த திருவாண்டார்கோயில் என்றே காணப்பெறுகிறது. இத்தலம் பற்றி இதுவரை எவ்விதக் கருத்து வேறுபாடும் இருந்ததில்லை.

## பதிகத்தின் ஒரு பகுதி :

''கோலம் பொழிற்சோலைக் கூடி மடவன்னம்
ஆலும் வடுகூரில் ஆடும் அடிகளே!''

''வரிவண்டு
பாடும் வடுகூரில் ஆடும் அடிகளே!''

''அந்தண் வடுகூரில் ஆடும் அடிகளே!''

''அருமா வடுகூரில் ஆடும் அடிகளே!''

இவை வடுகூர் பற்றியும் அத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் பற்றியும் திருஞானசம்பந்தர் பாடியருளிய திருப்பதிகத்தின் சில அடிகளாகும்.

## கல்வெட்டுகளில் பழம் பெயர்கள் :

பாடல் பெற்ற நடுநாட்டுத் தலங்களில் சில, கோயிலுக்கென்று ஒரு பெயரையும், ஊருக்கென்று இன்னொரு பெயரையும் கொண்டிருந்தன. கோயிலுக்கென்று தனிப் பெயர் இல்லாத போது, ஊரின் பெயராலேயே அத்தலத்து இறைவன் குறிக்கப் பெறுவதும் உண்டு. இப்பெயர்கள் யாவும் திருப்பதிகங்களிலும் கல்வெட்டுகளிலும் மாற்றம் ஏதுமின்றிக் காணக் கிடக்கின்றன.

''குலைகொள்மாங் கனிகள் சிந்துங்
கோவல் வீரட்ட னீரே!''

இது திருக்கோவலூர்த் தலம் பற்றிய அப்பரின் அருள் வாக்கு. இங்குக் கோவல் என்பது ஊரையும், வீரட்டம் என்பது கோயிலையும் குறிக்கும். இவற்றையே ''மலாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூர் திருவீரட்டானமுடையார்'' என்று அங்குள்ள கல்வெட்டுகள் குறிக்கின்றன.

''எந்தையூர் எய்தமான் இடையாறுஇடைமருதே!''

இது சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அருட்பாடல். இங்கு இடையாறு ஊர்; இடைமருது கோயில். ''இடையாற்று மருதந்துறை'' என்பது அங்கு உள்ள கல்வெட்டுத் தொடர்.

''தேனார் பெண்ணைத் தென்பால்
வெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள்''

இது திருவெண்ணெய்நல்லூர்த்திருத்தலத்தைச் சுந்தரர் பாடியது. ஊரின் பெயர் திருவெண்ணெய் நல்லூர்; கோயிலின் பெயர் திருஅருள் துறை. ''திருமுனைப்பாடித் திருவெண்ணெய் நல்லூர்த் திருவருட்டுறை ஆட்கொண்டருளிய நாயனார்'' என்பது இத்தலத்துக் கல்வெட்டுத் தொடர். இவை எல்லாம் ஊருக்கும் கோயிலுக்கும் தனித் தனிப் பெயர்களைக் கொண்டு இருந்த திருத்தலங்கள்.

''அருவி வந்தலைக்கும் ஆமாத்தூர் அம்மானே!'

இது தேவாரப் பாடல். 'திருவாமாத்தூருடைய அழகிய நாயனார்'—இது கல்வெட்டுத் தொடர்.

'ஆடினார் அறை யணிநல்லூர் அங்கையால் தொழு வார்களே!' என்பது பதிகம். 'திருவறையணிநல்லூர் உடையார் ஒப்பொருவருமில்லாத நாயனார்' என்பது கல்வெட்டு. 'ஒண் பலவின் இன்கனி சொரிந்துமணம் நாறுதவி மாணிகுழியே!' இது திருமாணிகுழி பற்றிய பதிகம். 'விக்கிரம சோழ நல்லூர் உதவி திருமாணிகுழி ஆளுடையார்'' என்பது அங்குள்ள கல்வெட்டுப் பகுதி. இவ்வாறு கோயிலுக்கென்று தனிப் பெயர் இல்லாதபோது, ஊரின் பெயராலேயே இறைவன் குறிக்கப் பெறுவதைக் காணலாம். திருத்தினை நகர், திருவக்கரை, திருவரசிலி, இரும்பை மாகாளம் என்று இதற்குப் பல சான்றுகள் பட்டியலாகக் காட்டலாம்.

பதிகங்கள் பாடப்பெற்ற காலத்துக்கும் கல்வெட்டுகள் வரையப்பெற்ற காலத்துக்கும் ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகள் இடைவெளி இருந்தன. என்றாலும், ஊர்ப் பெயர்களிலோ கோயிற் பெயர்களிலோ பெரிய மாற்றங்கள் ஏதும் தெரியவில்லை. 16ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில் கூட இப்பெயர்கள் அப்படியே உள்ளன.

## திருவாண்டார் கோயில் கல்வெட்டுகள் :

திருவடுகூர் என்று கருதப்பெறும் திருவாண்டார் கோயிலில் 19 கல்வெட்டுகள் உள்ளன. அவை முற்பட்ட சோழர் காலம் தொடங்கி விசய நகரப் பேரரசு காலம் முடிய வரையப்பட்டவை. கி.பி. 10ஆம் நூற்றாண்டின் முற்பகுதி முதல் கி.பி. 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையிலான 5 நூற்றாண்டுக் காலங்களில் பொறிக்கப்பட்டவை. இவற்றில் ஒரு கல்வெட்டாவது இவ்வூரின் பெயரை வடுகூர் என்று குறிப்பிடவில்லை. மாறாகத் திருபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்தின் ஒரு பகுதியாகவே கூறுகின்றன. இறைவன் 'திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்துத் திருவறையுடைய மகாதேவர்' என்றும், 'திருவறையாளும் பரமசுவாமி' என்றும் கூறப் பெறுகிறார்.

இச்சதுர்வேதி மங்கலம், இவ்வூருக்கு மேற்கே ஏறத்தாழ 2 கி.மீ. தொலைவில் திருபுவனை என்னும் பெயருடன் இன்றும் உள்ளது. ஆதலின், திருவாண்டார் கோயிலைத் திருவடுகூர் என்று கொள்வதற்குக் கல்வெட்டுச் சான்று ஏதுமில்லை. இத்தலத்து இறைவன் வடுகநாதர் என்று வழங்கப்பெறும் ஒரே காரணம் பற்றி, திருஞானசம்பந்தரின் திருப்பதிகம் பெற்ற திருவடுகூர் இதுவென்று கூறுதல் பொருத்தமாக இல்லை.

## கல்வெட்டுப்பாடலில் வடுகூர் :

''சீராரும் வடுவூர்ச் சிவற்கொருநந் தாவிளக்கு
ஆரா தனைசெய்வோ ரங்கெரிப்பப்—பாரோ தச்
செம்பொன் பதினெண்கழஞ்சளித்தான் தென்னுலிச்
சம்பந்தன் ஆணத்தான் தான்''

இது திருக்கண்ணீச்சுரம் என்னும் சிவன் கோயிலின் தெற்குச் சுவரை அலங்கரிக்கின்ற ஒரு கல்வெட்டுப் பாடல். திருக்கண்ணீச்சுரம் என்னும் இவ்வூர், இன்று திருக்கண்டேசுவரம் என்னும் பெயருடன், தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் வட்டத்தில் உள்ளது. நெல்லிக்குப்பம் நகரிலிருந்து மேற்கே ஒரு கி.மீ. சென்றால் இவ்வூரை அடையலாம். இது நடு நாட்டிலுள்ள தென்பெண்ணையாற்றின் தென் கரைத் திருத்தலம். சோழப் பேரரசு நிலவிய காலத்துக் கல்வெட்டுகளும், பாண்டியப் பேரரசு நிலவிய காலத்துக் கல்வெட்டுகளும் இக்கோயிலில் இடம் பெற்றுள்ளன.

இக்கல்வெட்டுப் பாடல், இரண்டாம் இராசேந்திர சோழனின் 9ஆவது ஆட்சி (கி.பி. 1060) ஆண்டில் வரையப்பெற்றது.

ஆணத்தான் சம்பந்தன் என்னும் பெயருடைய கொடையாளன் ஒருவன், இச்சிவன் கோயிலில் விளக்கெரிக்கும் பொருட்டு, 18 கழஞ்சு பொற்காசுகளைச் சிவபிராமணர்களிடம் மூலதனமாக வழங்கிய செய்தியை, இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இதே ஆண்டில் வரையப் பெற்ற இம்மன்னன் காலத்து மற்றொரு கல்வெட்டில் இச்செய்தி, உரைநடை வடிவில் கூறப்பெறுகிறது. இப்பாடலில் ஊரின் பெயர் வடுகூர் என்று வருவது குறிப்பிடத்தக்கது. வடுகூர் என்பதே இங்கு வடுவூர் என்று மருவி வழங்குகிறது.

## இன்னுமொரு கல்வெட்டு :

முதலாம் குலோத்துங்க சோழனின் 14வது ஆட்சி (கி.பி. 1084) ஆண்டுக் கல்வெட்டு ஒன்றிலும், இக்கோயில் இறைவன் 'வடுவூர் மகாதேவர்' என்று குறிக்கப்பெறுகிறார்.

''சோழகுலவல்லிநல்லூர் திருவடுவூர் மகாதேவர் கோயிலில் தெட்சணாமூர்த்திகளுக்குத் திருவமுதுக்கு அரிசிஇரு நாழியும் நெய் அமுதும் கறி அமுதும் அடைக்காயமுதுக்கும் ஆக நெல் குறுணிக்கும் நிமந்தஞ் செய்த நிலமாவது'' என்பது இக்கல்வெட்டுப் பகுதி. ஆதலின், இவ்வூரின் பழமையான பெயர் 'வடுகூர்' என்பதை, இக்கல்வெட்டுகளால் அறிகிறோம். சோழர் காலத்தில் இதற்குச் 'சோழகுலவல்லி நல்லூர்' என்ற புதிய பெயரும் இடப்பட்டது. இவ்விரு பெயர்களுமே இங்குள்ள கல்வெட்டுகளில் பயின்று வருகின்றன. ஆயினும், இக்காலத்தில் இப்பெயர்கள் மறைந்துவிட்டன. காலப்போக்கில் 'திருக்கண்ணீச்சுரம்' என்னும் கோயிலின் பெயர், ஊருக்கும் பெயராயிற்று. அப்பெயரும் இன்று திருக்கண்டேசுவரம் என்று மருவிவிட்டது.

## ஆடும் அடிகளும் அரிய பெயர்களும் :

இத்தலத்து இறைவன் இக்காலத்தில்நடன பாத ஈசுவரர் என்ற திருப்பெயரால் அழைக்கப் பெறுகிறார். இப்பெயர் திருஞானசம்பந்தர் கூறிய ஆடும் அடிகள் என்ற பெயரின் மறு வடிவமே! இறைவிக்கு அஸ்த தாள அம்பிகை (அஸ்தம்—கை) என்று பெயர். இறைவனின் திருநடனத்துக்கு ஏற்ப, இறைவி கைத்தாளம் கொட்டினளாம். இது செவி வழிச் செய்தியாயினும் எவ்வளவு பொருத்தம்!

முற்காலத்தில் இப்பகுதியில் வாழ்ந்து வந்த அறவோரில் சிலரும், பட்டர் ஒருவரும், இவ்விறைவனின் பெயரையே தமது பெயராகப் புனைந்திருந்தனர். இக்கோயிலுக்கு விளக்குத் தானம் செய்த ஒரு அறவோன் 'திருநடஞ்செய் பாதபிச்சன்' என்றும், நிலதானம் செய்த

மற்றொரு அறவோன் 'மன்றில் குனிக்கும் பெருமான்' என்றும் பெயர் பெற்றிருந்தனர். 'சோழகுலவல்லி பட்டன் ஆடும் அடிகள்' என்று பட்டர் ஒருவர் அழைக்கப்பெற்றுர். இப்பெயர்கள் எல்லாம் அக்காலத்துத் திருவடுகூர் இறைவனுக்கு வழங்கி வந்த பெயரின் மாற்று உருவங்கள் என்பதில் ஐயமில்லை.

### வான்புகழ் வடுகூர் கண்டோம்!....

திருக்கண்ணீச்சுரத்துக்குக் கிழக்கே திருப்பாதிரிப்புலியூர், தெற்கே திருமாணிகுழி, மேற்கே திருவதிகை—முதலான தலங்களும் ஞானசம்பந்தரின் திருப்பதிகம் பெற்ற தலங்களாகும். திருஞான சம்பந்தர் காலம் முதல் கி.பி. 11ஆம் நூற்றுண்டு வரை திருக்கண்டேசுவரத்துக்கு வடுகூர் என்ற பெயரே இருந்துள்ளது. இதுவும் சோழர் காலத்துச் சோழகுலவல்லி நல்லூர் என்ற பெயரும் மறைந்தன. ஆனுலும், இங்கு மறையாதிருந்த கல்வெட்டுகள், நமக்கு மறைக்காமல் திருவடுகூரை அடையாளம் காட்டிவிட்டன.

''திருநடஞ்செய் பாதபிச்சன்', 'மன்றில் குனிக்கும் பெருமான்,' 'பட்டன் ஆடும் அடிகள்' முதலான அக்காலத்துப் பெயர்கள், சம்பந்தர் போற்றிய 'ஆடும் அடிகளே!' என்பதற்குக் கட்டியம் கூறுகின்றன. எனவே, சம்பந்தப் பெருமான் போற்றியருளிய திருவடுகூர் ஆடும் அடிகளைக் காண வேண்டுமா? தென்னுர்க்காடு மாவட்டம், கடலூர் வட்டத்திலுள்ள திருக்கண்ணீச்சுரத்துக்கு வாருங்கள்!

**

---

## மூன்று பிழைகள்

மூன்று பிழைகள் புரிகின்றேன்!
முதல்வா! என்னைப் பொறுத்தருள்க!
தோன்றும் உருவம் இலாதநின்னை
உருவின் வைத்துத் தொழுகின்றேன்!
ஏன்றிங் கியம்ப ஒணுநின்னை
எளியேன் புகழ முயலுகின்றேன்!
சான்ருய் எங்கும் பரந்தநின்னைக்
கோயில் சார்ந்து தடவுகின்றேன்!

—தமிழாக்கம்: ந. ரா. முருகவேள்.

---

"O Lord, pardon my three sins.
I have in contemplation clothed in form
Thee who art formless;
I have in praise described Thee
Who art ineffable;
In visiting temples I have ignored
Thine Omnipresence."

—Sankara in Sivananda Lahari,
TRANSLATED & QUOTED BY
**A. C. BOQUET**,
in his *Comparative Religion*.

# அருணகிரியின் அமுதவாக்கு

திரு. டி. எஸ். சீநிவாசன், B.A.,B.T.
தேவகோட்டை.

முருகன் தமிழ்த் தெய்வம். குறிஞ்சி நிலக் கடவுள். அழகியமணவாளன், எல்லோரையும் வாழ்விக்க வந்த தெய்வம். அப்பேர்ப்பட்ட கண்கண்ட கலியுகதெய்வமான முருகப்பெருமானின் திருவாக்கால் பிரணவமந்திரம் உபதேசம் பெற்றவர்கள் மூன்று பேர்தான். 1. சிவபெருமான், 2. அகத்தியர். 3. அருணகிரி நாதர். சிவபெருமான் தேவர்களில் சிறந்தவர். அவருக்கு உபதேசித்ததால் தகப்பன் சுவாமி ஆனுன், சுவாமி நாதனுனுன். முனிவர்களில் சிறந்தவர் அகத்தியர். மனிதர்களில் சிறந்தவர் அருணகிரி நாதர். முருகப்பெருமானையே தன் அருள்வாக்கினுல் பாடி உலகத்தாருக்குப் பரவசமும் பக்தியும் ஊட்டினுர். ''எல்லோரும் இன்புற்று இருப்பதே அல்லாமல் வேறென்றும் அறியேன் பராபரமே'' என்றவாக்கிற் கிணங்க நம் அருணகிரிநாதர் தன் செந்தமிழ்த் திருவாக்கால் உலக மக்களின் நல்வாழ்விற்குப் பல முருகன் பாமாலைகளைத் தொடுத்து நமக்கு வழங்கி இருக்கிருர்கள். அவைகளை நாம் அணிந்து மகிழ்ந்து ஆனந்தத்தாண்டவம் ஆடுகிறேம்.

அருணகிரியார் பல பாடல்கள் இயற்றியுள்ளார்கள். ஆனுல் திருப்புகழ்தான் சிறந்த நூல். திருப்புகழை அன்புடன் ஓதுவார்க்கு அஷ்டமாசித்திகளும் உண்டாகும்.

''அருணகிரி நாதர் பதினுருயிர மென்
றுரைசெய்திருப்புகழை ஓதீர்—பரகதிக்கஃது
ஏணி; அருட்கடலுக் கேற்றம்; மனத்தளர்ச்சிக்
காணி; பிறவிக்கு அரம்.''

திருப்புகழ் முருகப் பெருமானுடைய திருமார்பை அலங்கரிக்கின்ற மதாணி ஆகும். அவர் அணிந்து கொண்டிருக்கும் கடம்ப மலர் மாலை மணக்குமாறு இருக்கத் தெளிக்கும் பன்னீர் ஆகும்.

''வேதம் வேண்டாம் சகலவித்தை வேண்டாம்கீத
நாதம் வேண்டாம் ஞானநூல் வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள்
போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம்.''

முருகப்பெருமானின் அருளைப் பெற வேண்டுமானுல் திருப்புகழைப் பாட வேண்டும்.

அருணகிரிநாதர் முருகப்பெருமானிடம் மௌன மந்த்ரோப தேசம் கேட்டுக் கொண்டிருந்தார். சமாதியில் இருந்தார். முருகப் பெருமான் அவர்முன் தோன்றி ''நம் புகழைப் பாடு'' என்று அருள்புரிந்தார். அதற்கு அருணகிரிநாதர், கண்ணீரும் கம்பலையுமாய், ''ஆண்டவனே! வேதங்களுக்கும், முற்றும் துறந்த முனிவர்களுக்கும் புலப்படாத உன்னை இந்தச் சிறியவன் பாட என்ன தகுதி உள்ளவன்?'' என்று பணிந்து வேண்டினுர். உடனே முத்துக்குமரன் நகைத்து, ''முத்தைத்தரு'' என்று மதுரவாக்கினுல் அவருக்கு அடி எடுத்துக் கொடுத்தார். அப்படித் தோன்றிய முதல் திருப்புகழ்ப் பாடல்தான் ''முத்தைத்தரு பத்தித்திருநகை'' என்ற பாடல். மு என்ற எழுத்தில் அகரம், மகரம், உகரம், என்ற எழுத்துக்கள் சேர்ந்துள்ளன. அ, உ, ம், இந்த மூன்றின் சேர்க்கை. ''ஓம்'' என்ற பிரணவ மந்திரமாயிற்று. ஞானபண்டிதனுன, தகப்பன் சாமியான, திருமுருகன் இந்த முதற் பாடலிலேயே ''ஓம்'' காரத்தைத்தன் தகப்பனுருக்கு உபதேசித்ததுபோல, தன் அடியார் ஆன அருணகிரிநாதருக்கும் உபதேசித்தான். பின் கொஞ்சு தமிழில் திருப்புகழைப் பாடினுர்.

''சந்ததம் பந்தத்தொடராலே''

என்ற திருப்புகழில் ''பந்தம்'' என்ருல் கட்டு என்று பொருள். உயிர்களாகிய நாம் கட்டுண்டு கிடக்கிறேம். அதனுல் பசு என்று அழைக்கப் படுகிறேம். நமக்குத் தலைவன் பசுபதி. பசுவை ஒரு கயிருல் கட்டுவார்கள். யானையை இரு சங்கிலிகளால் கட்டுவார்கள். ஊஞ்சலை நான்கு சங்கிலிகளால் கட்டுவார்கள். ஆன்மாக்களாகிய நாம் ஐந்து சங்கிலிகளால் கட்டப்பட்டுள்ளோம். ஊஞ்சல் அறுந்து விழுவதுபோல் நம் ஞான குருவின் உபதேசத்தால், நம் ஐம் புலன்கள் அறுக்கப்படுகின்றன. நாம் இறைவன் திருவடியில் விழுகிறேம்.

''முந்துதமிழ் மாலை கோடி கோடி'' என்ற பாட்டில், முந்து தமிழ் மாலை என்ருல் பழமை

யான தமிழ்ப் பாடல் என்று பொருள். ஈசுவரன் சிவபெருமான் வடமொழிக்கும், தென் மொழிக்கும் ஆசிரியர். வடமொழியைப் பாணினிக்கும், தென்மொழியை அகத்தியனுக்கும் உபதேசித்தார். சிவபெருமான் மதுரையில் புலவர் குழாத்தில் தாமும் ஒருவராக இருந்து ஆராய்ந்தார். சிவபெருமானே ஆசிரியராதலால் தமிழ்மொழி சிறப்புப்பெற்றிருக்கிறது. பழமையானது.

திருப்புகழ் பெருமை வாய்ந்தது என்பதற்குச் சான்று கந்தரலங்காரத்தில் ஒரு செய்யுளில் அவரேபாடி இருக்கிறார்.

தாவடி யோட்டும் மயிலிலும்,
தேவர் தலையிலுமென்
பாவடி யேட்டிலும் பட்ட தன்றோ?
படி மாவலி பால்
மூவடி கேட்டன்று மூதண்ட
கூட முகடு முட்டச்
சேவடி நீட்டும் பெருமாள்
மருகன் றன் சிற்றடியே.

தாவடி என்றால் பிரயாணம். முருகப்பெருமான் புறப்படுகிறார். முதலில் அவருடைய காலடி மயில் மேல்படுகிறது. முதலில் காலடிபடும் பாக்கியம் மயிலுக்குத்தான் கிடைத்தது. பின் தேவர்கள் எல்லாம் சிரம் தாழ்த்தி வணங்கி அவரை வழிபடுகிறார்கள். அவர்கள் சென்னியிலும் அவருடைய தாமரை மலர்ப்பாதம் பட்டது. அவர்களும் தீக்கை பெற்றார்கள். பிறகு அவருடைய சிற்றடி என்பாவடி ஏட்டில் பட்டது. அவருடைய பாக்களால் தொகுக்கப் பட்ட திருப்புகழ் என்று பொருள். அந்தத் திருப்புகழில், அவருடைய மலர்ப்பாதம் பட்டது. அதனால் அத்திருப்புகழ் புனிதம் அடைந்தது.

கந்தரலங்காரத்தில் மற்றொரு பாடல்.

நாளென் செயும்? வினைதான் என்செயும்?
என் நாடி வந்த
கோளென் செயும்? கொடுங் கூற்றென் செயும்?
குமரேசரிரு
தாளும் சிலம்புஞ் சதங்கையும், தண்டையும்
சண்முகமுந்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே வந்து
தோன்றிடினே.

இறைவன் குமரனுடைய திருவடிகளும், சிலம்புகளும், சதங்கையும், தண்டைகளும், ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு தோள்களும், கடம்ப மலர் மாலையும், என் முன்னால் வந்தால், கொடிய திதி, நட்சத்திரம் கூடிய நாள் என்னை என்ன செய்ய முடியும்? யமன்தான் என் முன் வர முடியுமா?'' என்று அருணகிரியார் அறை கூவல்விடுகிறார். முருகப்பெருமான் திருவடியை நினைப்பவர்களுக்கு யமபயம் கிடையாது. ஆதலால் நாம் எல்லோரும் குமரனை வணங்குவோம்.



## சிவஞானபோதச் சிறப்பு!...

தத்துவப் பொருள்கள் தம்மைச் சங்கத மொழியினால்தான்
மெத்தவும் விளக்கல் கூடும், என்றிருந்த விதியை மாற்றி,
வித்தகர் மெய்கண்டார், நம் வியன்பெருந் தமிழ்நற் சான்றோர்,
தித்திக்கும் தமிழிற் செய்த நூல், சிவ ஞான போதம்! (1)

சங்கரர், இராமா நுசர், மத்வர், சிகண்டர், சைதன்யர், நிம்பார்க்கர் எல்லாம்,
சங்கத மொழியில் தான், தத்தம் நூல்கள் தகவென இயற்றினர் போந்தார்!
இங்கந்த நிலையை மாற்றி, மெய்கண்டார் எனும் அருட்பெருந் தமிழ்ச் சான்றோர்,
தென்றமிழ் மொழியிற் செய்தளித் தருள்நூல், சிவஞான போதநூல் ஆகும்! (2)

அறம்பொருள் இன்பம் வீடு நான்கும்நூற் பயனாய்ச் சொல்வர்!
திறம்பட அவற்றுள் மூன்றே, திருக்குறள் கூறு நிற்கும்;
உறழ்ந்தசீர்ப் புலமைத் தெய்வத் திருவள்ளு வனாரும் ஓதாச்
சிறந்தநற் பொருளைச் செப்பும், சிவஞானபோத நூலே! (3)

தன்னாற் கூறப் படும்பொருளும், அதன்கட் சாரும் ஐயப்பாடும்,
முன்னி அதற்குப் பிறர்கூறும் முடிபும், அவற்றை மறுத்துரைத்துத்
துன்னி நிறுவும் சித்தாந்தத் துணிபும், இயைபும், அதிகரணம்
என்ன அமையச், சிவஞான போதம் தொடர்புற் றினிதிலங்கும் (4)

பதிபசு பாசம் என்னும்முப் பொருளும், பற்றிநற் பன்னிரு நூற்பா,
பொதுசிறப்பு என்னும் இரண்டதி காரம், பிரமாணம் இலக்கணம் பொருந்து
விதிசெய்சா தனமே பயனியல் என்னும் நான்கியல், வியன்முப்பத் தொன்பான்
அதிகரணம் அமையச், சிவஞான போதம் அறிஞர்கள் வியந்திடத் திகழும். (5)

—ந. ரா. முருகவேல்

# பிள்ளைத் தமிழ்

திரு. கி. கோதண்டபாணி, M.A., B.O.L.

தமிழ்ப் பேராசிரியர், புஷ்பம் கல்லூரி, பூண்டி.

பிள்ளைத் தமிழ், தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகும். ''குழவி மருங்கினும் கிழவதாகும்'' என்ற தொல்காப்பியப் புறத்திணையியல் 24-ஆம் நூற்பாவினை ஆதாரமாகக் கொண்டு, இந்நூல் அமைந்தது என்று கூறுவர். 'மருங்கு' என்றதனால் ''மக்கட் குழவியாகிய ஒரு மருங்கே கொள்ளப்படும்; தெய்வக்குழவியின்மையின்'' என எழுதப்பட்டிருந்தும் கடவுளரயும், கடவுட் பெண்டிரையும் குழவிப் பருவத்தினராகக் கொண்டு பிற்காலத்தே பிள்ளைத்தமிழ் நூல்கள் பல எழுந்தன. இந்நூல் ஆண்பாற் பிள்ளைத் தமிழ் என்றும், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என்றும் இருபாற்படும். தாங்கள் போற்ற விரும்புபவரைக் குழந்தையாக வைத்து, காப்பு முதலிய பத்துப் பருவங்களை அமைத்துப் பாராட்டுவது இதன் இலக்கணமாகும். இந்நூலில் மூன்று மாதம் முதல் இருபத்தோராம் மாதம் வரை ஒற்றித்த மாதமாகிய பத்து மாதங்களிலும் பத்துப் பருவங்களைச் சிறப்பித்துப் பாடுவர்.

தொல்காப்பியர் கூறிய வனப்பு எட்டனுள் ஒன்றாகிய 'விருந்து' என்பதைப் பொது விதியாகக் கொண்டு இந்நூல் எழுந்தது. இந்நூலினைக் குழந்தையின் மூன்றாம் ஆண்டிலும், ஐந்தாம் ஆண்டிலும், ஏழாம் ஆண்டிலும் கேட்பிக்கினும் இழுக்காது என்று பன்னிரு பாட்டியல் கூறும். ஐந்தாம் ஆண்டிலும், ஏழாம் ஆண்டிலும் பாடினும் இழுக்கில்லை என வெண்பாப் பாட்டியலும் கூறும். மற்றும் ஆண்பாற் காயின் பதினாறு ஆண்டளவும், பெண்பாற் காயின் பூப்பு நிகழும் வரையிலும், கேட்பித்தல் குற்றமாகாது என இந்திரகாளியம் இயம்பும். எனினும் அரசன் இளையனாயினும் முடிசூடிய பின் பிள்ளைக்கவி பெறலாகாது என்பது ''தொன்னிலை வேந்தர் சுடர்முடி சூடிய, பின்னர்ப் பெறாஅர் பிள்ளைப் பாட்டே'' எனப் பன்னிருபாடலும் வலியுறுத்துகிறது. சந்தப் பாக்களால் விரவி வருகின்ற இந்நூலில் பத்துப் பருவங்களையும் பாடவேண்டிய முறைமையை நோக்குமிடத்துக் காப்புச் செய்யுளை ஒன்பதாக வேனும், பதினொன்றாகவேனும் பாடுதல் வேண்டுமென்பதும், பருவங்கள் பத்தையும் தம்மில் ஒப்புக்கொண்டு பாடுமிடத்து ஒற்றைப் படப் பாடுதல்சிறப்புடைத்தென்றும், இரட்டிக் கப்பாடின் ஓசைபெயர்த்துப்பாடுதல்வேண்டும் என்பதும் வரையறை. இவ்வரையறையை மீறிப்பருவத்தின் பாட்டுக்கள் எண்ணிக்கையைக் குறைத்துப் பாடியவர்களும், மிகுத்துப் பாடியவர்களும் உண்டு. பருவத்திற்கு வெவ்வேறு பாடல்களையுடையது 'சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத்தமிழ்'. பருவத்திற்கு ஐந்தைந்து பாடல்களையுடையது 'செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ்'. மும்மூன்று பாடல்களையுடையதாய்ப் பழனிப்பிள்ளைத் தமிழும், எதுவுமே வரையறையின்றிப் பருவத்திற்குப் பருவம் பாட்டுக்களின் எண்ணிக்கை மாறுபட்டனவாய் அமைந்து 'ஆண்டாள் பிள்ளைத் தமிழும்' விளங்கக் காண்கின்றோம். மேலும் பருவம் பத்தே வரையறையாக இருந்தும், பதினொரு பருவம் கொண்டதாக ஆண்டாள் பிள்ளைத்தமிழும், பன்னிரு பருவங்களைப் பெற்றதாகத் ''தில்லைச் சிவகாமியம்மை பிள்ளைத் தமிழும்'' அமைந்திருக்கக் காண்கின்றோம்.

இனி நூலிற் பயின்று வரும் பத்துப் பருவங்களையும் நோக்குவோம். ஆண்பால், பெண்பால் ஆகிய இருபாற் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவாகிய முதல் ஏழு பருவங்களின் விளக்கம் காண்போம். இவை முறையே காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி என்பனவாகும். காப்புப் பருவத்தில் திருமால் முதலிய தெய்வங்களை, பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைக் காக்க வேண்டுமென்று பாடுவர். திருமால், அரன், பிரமன், பிள்ளையார், முருகன், கதிரவன், வடுகன், எழுவர் மங்கையர், இந்திரன், சாத்தன், குபேரன், நீலி; முப்பத்து மூன்று தேவர்கள், திருமகள், பாமகள், சந்திரன் ஆகிய அனைவரும் காப்பில் வருதற்குரிய கடவுளாவர். இவர்களுள் காக்கும் தொழிலை ஆற்றுகின்ற காரணத்தால் திருமாலைக் காப்புப் பருவ முதற் கடவுளாகக் கொள்ள வேண்டுமென்ற வரையறையிருந்தும், பல நூலாசிரியர்கள் தங்கள் மனம் விரும்பியபடி பாட்டுடைத் தலைவர்களின் தொடர்புக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப முறையை மாற்றிப் பாடினர்.

காப்புப் பருவக் கடவுளராகத் திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளையும், எழுவர் மங்கையரையும் (சப்தகன்னியர்) செய்யுளில் கூறுமிடத்து அவர்தம் கொலைத் தொழில் அகற்றி மங்கலமாகப் பாட வேண்டுமெனப் பன்னிரு பாட்டியல் கூறுகின்றது.

இரண்டாம் பருவம் செங்கீரைப் பருவம். இது ஐந்தாம் மாத நிகழ்ச்சியாகும். 'கீர்' என்பதற்குச் சொல் எனப்பொருள் கொண்டு,

தொடையமைதி பெருத்தத்னைச் செந்தொடை எனப் பெயரிட்டது போல, 'சொல்லுக்குரிய அமைதியில்லாததைச் 'செங்கீரை' என்றார் எனக் கொண்டு, இது குழந்தைகள் மழலையைக் காட்டிலும் இளம் பருவத்தினதான பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பது ஆகும் என ஒரு சாராரும், ''ஆடுக செங்கீரை'' எனும் செய்யுள் வழக்கைக் கொண்டு'குழந்தை ஒரு காலை முடக்கி, ஒருகாலை நிமிர்த்தி, இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றி முகத்தை மேல் நிமிர்த்து ஆடுதலாகிய பருவத்தைக் குறிக்கும்' எனப் பிறிதொரு சாராரும் கூறுவர்.

மூன்றும் பருவம் தாலப்பருவம். ஏழாவது மாத நிகழ்ச்சியைக் கூறுவது. குழந்தையைத் துயிலச் செய்வார் தம் நாவை அசைத்தலும், பாட்டுப்பாடுதலும் வழக்கம். 'தாலே, தாலேலோ' என்னும் சொல்லிறுதியுடன் இப் பருவச் செய்யுட்கள் முடிவடைகின்றன.

நான்காம் பருவம் சப்பாணிப் பருவமாகும். குழந்தையைக் கையோடு கைசேர்த்துக் கொட்டும் விளையாட்டாகிய சப்பாணி கொட்டும்படி வேண்டும் ஒன்பதாம் மாத நிகழ்ச்சி கூறும் பருவமாகும்.

ஐந்தாவது முத்தப்பருவம். பதினோராம் மாதத்து நிகழ்ச்சியைக் கூறும் பருவம். குழந்தையின் முத்தம் தருக எனத் தாயரும் பிறரும் வேண்டுவதாகக் கூறுதல்.

ஆறுவது வருகைப் பருவம். பதின்மூன்றும் திங்கள் நிகழ்வது கூறுவது. தளர்நடையிட்டு வரும் குழந்தையை வருக என்று அழைப்பதாகக் கூறுவது. இதனை வாரானைப் பருவம் என்றும் கூறுவர்.

ஏழாவது அம்புலிப்பருவம். பதினைந்தாம் மாத நிகழ்ச்சி கூறுவது. அம்புலியாகிய மதியை நோக்கி, குழந்தையோடு விளையாட வா என்று அழைத்தலைக் கூறுவது. இப்பருவம் ஏனைய பருவங்களினுனும் பாடற்கரிதென்பதனை ''பிள்ளைக்கவிக் கம்புலியாம்'' என்ற பாடலடி விளக்குகிறது. அவ்வாறு மதியை அழைக்கும் போது, சாம, பேத, தான தண்ட வகையால் முறையே அம்புலிக்கும் பாட்டுடைத்தலைவர்க்கும் ஒப்புக்கூறுதலும், வேற்றுமை கூறுதலும், வரின் விளையும் நன்மை கூறுதலும், வாராவிடில் நிகழும் துன்பம் கூறுதலும் மரபு.

இவ்வேழு பருவங்களும் ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் ஆகிய இரண்டற்கும் பொது. அடுத்த மூன்று பருவங்கட்கு ஆண்பாற் பிள்ளைத் தமிழில் சிற்றில், சிறுதேர், சிறுபறை ஆகிய மூன்றும் பாடப்படும். சிற்றில் பருவத்துச் சிற்றிலிழைத்து விளையாடும் சிறுமியர் பாட்டுடைத்தலைவன் சிற்றிலையழிக்கின்றபோது ''எமது சிற்றிலை அழியாதொழிக'' எனப் பாடுவர். சிறுபறைப் பருவத்துப் பாட்டுடைத் தலைவனைச் சிறுபறை முழக்கும்படியும், சிறுதேர்ப் பருவத்துச் சிறுதேருருட்டும்படியும் பாடுவர்.

இம்மூன்றும் பெண்பாற் பிள்ளைத்தமிழில் கழங்கு, அம்மானை, ஊசல் எனப்பெயர் கொண்டு விளங்கும் என அறியலாம். பெரும்பாலான பிள்ளைத்தமிழ் நூல்களில்அம்மானை, நீராடல், ஊசல் போன்றவைகளே வைத்துப் பாடப்பட்டுள்ளன. இத்தகைய இப் பிள்ளைத் தமிழ் இலக்கியம். தமிழ் இலக்கிய உலகிலே இடைக்காலத்தே தோன்றி, இக்காலம் வரையில் நல்ல வளர்ச்சியைப் பெற்றுள்ளது. ஒட்டக் கூத்தரின் ''குலோத்துங்க சோழன் பிள்ளைத்தமிழ்'' முதல்பிள்ளைத் தமிழ் நூலாகும். இதனை அடியொற்றிக் குமரகுருபரசுவாமிகளின் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும், முத்துக்குமாரசாமிபிள்ளைத் தமிழும்தோன்றின. பின்னர் சிவஞானசுவாமிகளின் அமுதாம்பிகையம்மை பிள்ளைத்தமிழும், பகழிக் கூத்தரின் 'திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழும், மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களின் ''சேக்கிழார் பிள்ளைத்தமிழும்'' பிறவும் தோன்றின. தற்காலத்தில் கம்பன் பிள்ளைத்தமிழ், காந்தி பிள்ளைத்தமிழ் முதலியன பலவும் தோற்றம் எடுத்தன. மேலும் முகமதியக் கவிஞர்களும் நபிகள்நாயகம் பிள்ளைத்தமிழ், முகைதீன்பிள்ளைத் தமிழ், ஆண்டவர் பிள்ளைத்தமிழ் போன்ற அரிய நூல்களை இயற்றி அளித்துள்ளனர்.

---

## கவிதை மாண்பு

மனக்கவலை தீர்க்கும் மருந்தாகும்; எல்லா
நினைப்பரிய தீக்குணமும் நீக்கும்;—தனக்கிணையில்
ஞாயிறுய்த், தெள்ளமிழ்த வான்யாறுய்த், தேனூற்றுய்,
மாவிருந்தாம் நற்கவிதை மாண்பு !

*தமிழாக்கம்*—ந. ரா. முருகவேள்.

" The soothing power of poetry is great and its influence on our mind is vivid and sweet. To hearts eaten away by sorrow and worldly cares, the reading of poetry comes as a healing balm ; to hearts chilled by the icy hand of cruelty, it appears like the warming rays of the morning sun ; and to hearts stained with the blackest crime and the basest vice it comes as the washing water of a crystal rill. Ah! How lovely are the changes wrought by poetry in the mind of man ; and how profound and permanent are the moral effects it brings into his inward nature."

—MARAIMALAI ADIGAL

# "நிழல்தரும் திருவடி"

'பண்டித-சிரோமணி'
திரு. என். எஸ். தாத்தாசாரியார், B.O.L., தஞ்சை.

**முன்னுரை:**

வெப்பம் தவிர்ப்பது நிழல். வெப்பமோ உடல் வெப்பம், உள்ள வெப்பம் என இரு வகை. உள்ள வெப்பம் மூன்று வகைப்படும். அவைகளை வடமொழியாளர் ''தாபத்திரயம்'' என்பர். உடல் வெப்பம் கதிரவனால் ஏற்படும். உள்ளத்தின் வெப்பம் நாம் செய்த உறுவினையால் ஏற்படும். உள்ள வெப்பம் தணிந்தால் உடலிலும் வெப்பம் தானே குறையும். உள்ள வெப்பத்தைப் போக்குவதற்கு ஏற்ற நிழல், இறைவன் திருவடியே. நிழல் என்றும் அடியில் தான்தோன்றும், முழுத் தொடர்பும் பெற்றிருக்கும். அதனால்தான் ஆன்ற பெரியோர்கள் இறைவன் திருவடியையே நாடி நிற்கிறார்கள். உள்ளத்தை அவனது திருவடியில் செலுத்துகிறார்கள்.

**மனித மனம்:**

மனத்தின் நிலையோ குரங்கு, யானையின் நிலைக்கு ஒப்பானது. யானைக்கு அச்சம் மிகும். தன் வலு தெரியாது. நின்றபடி திரும்பிப் பார்க்க முடியாது. மண்ணையும் கூளத்தையும் தன் தலையிலேயே வீசும் தன்மை. தன் விலங்கைத் தானே எடுத்துச் செல்லும் இயல்பு இவை யாவும் உள்ளது. குரங்கு நிலையற்றது. புதுப் புதுப்பொருளைக் கண்டு தாவும் தன்மை உடையது. தன்னையே தான் வியந்து காண்பது. கீழ் நோக்கம் கொண்டது. இவை யாவும் பண்பற்ற பக்தியில்லாத மனிதனது மனதிற்கும் உண்டு. ஆகவேதான் ஓடித்திரியும் மனத்தை அடக்கி ஓரிடத்தில் ஒடுக்க வேண்டும் என்றார்கள்.

மனம் சஞ்சலமானது, தவறு இழைப்பது, பலமுள்ளது, உறுதியானது, என்று கீதையில் கண்ணன் அருளினார். மனதை அடக்குவது என்பது யாது, அசையாமல் அலையாமல் நிறுத்துவதா? இல்லை. இயலாது. பெருகும் நீரையும், ஒன்றைப் பற்றிய மனத்தையும் அடைத்தால் அவைகள் மற்றோர் பக்கம் பாய்ந்துவிடும் என்றார் காளிதாசன். அதனால் இயக்கற்றுத் தான்தோன்றியாய், பள்ளம் மேடு பாராமல் ஓடும் மனதை உற்றதாய் உயரியதாய், நிலைத்ததாய், என்றும் இன்பம் பயப்பதாய், ஒய்வு கொள்ளத் தக்கதாய் உள்ள, ஓர் இலக்கை நோக்கிச் செலுத்த வேண்டும். அதுவே இறைவன் திருவடியாகும்.

சுண்ணாம்புச் சூளையில் இட்டபொழுதும் மருள்நீக்கியார் மனம், இறைவனின் திருவடியை பற்றியே நின்றது. அதனால்தான் அவரும் ''மாசில்வீணையும்'' என்ற தேவாரப் பாட்டில் இறைவனின் திருவடி பற்றிய இன்பம், மாசில் வீணையும் மாலை மதியமும் இளவேனிலும் தென்றலும் தாமரைப்பொய்கையும் போன்றது என்றார். மலையிலிருந்து தீயினில் உருட்டியபொழுதும் பிரகலாதாழ்வானின் மனம், இறைவனின் திருவடியையே பற்றாகக் கொண்டு இன்புற்றிருந்தது. சிதம்பரசுவாமிகளும் திருப்போரூர்ச் சந்நிதிமுறையில், முருகனிடம் தன்மனத்தை அவனது திருவடிக்கீழ் அமைக்க வேண்டும் என்று வேண்டினார்.

நோயுற் றடராமல், நொந்துமனம் வாடாமல்
பாயிற் கிடவாமல் பாவியேன்—காயத்தை
ஓர் நொடிக்குள்நீக்கி எனைஒண்போரூர்ஐயா, நின்
சீர் அடிக்கீழ் வைப்பாய் தெரிந்து.

என்று இப்பாட்டில் வரும் ''சீர் அடி'' என்ற தொடரில், சீர் என்ற அடைமொழி முருகனது திருவடியின் பெருமையை விளங்கக் காட்டும்.

**அடிகள்:**

அடியில் படிவது நிழல். நிழலோ வெப்பம் தவிர்ப்பது. இந்நிழல் இரவு பகல் மழைக் காலம் என்று பாராமல் என்றும் அடியார்களின் குடிலாகி அமையும். உலகத்தில் உடல் வெப்பம் தவிர்க்கும் நிழல்களில் புளி, மூங்கில் இவைகளின் நிழல், குளிர்ந்தே வெப்பம் தரவல்லவை மற்றும் அரசு, விளா, விளக்கு, மனிதன் பூனை நாய் என்ற இவைகளின் நிழலை, நம் முன்னோர்கள் அறவே ஒதுக்கினர். இறைவன் திருவடியில் பக்தி பூணும் நாளையே வைணவர்கள் ''நல்லடிக்காலம்'' என்பர். அத்தகைய திருவடியை நம்மாழ்வார் இருப்பிலிருந்தே ஏங்கி அடைய விழைகிறார். இத்தகைய பெரியோர்களைத்தான் ''குடி அடியார்'' என்பது.

**திருவிண்ணகரம்:**

வைணவத் தலங்களுள் ஒன்றாகிய திருவிண்ணகரம் என்ற ஊரில் உள்ள, சீநிவாசர் பெருமை தனித்தன்மை பெற்றது. விண்ணகரம் என்பதற்கு வைகுந்தம் என்று பொருள். இங்கு எழுந்தருளி உள்ள பெருமான், ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளவிரும்பி

அப் பெண்ணிற்காக உப்பில்லாப் பண்டங்களையே இனி அமுதுபடி செய்கிறேன் என்றுராம். அதன் அடிப்படையில் அவ்வூருக்கு உப்பிலி அப்பன் என்ற திருப்பெயர் தல புராணப்படி ஏற்பட்டது. ஒப்பு உவமை இல்லாத அப்பன் ஆனதினுல் ஒப்பிலி அப்பன் என்பதே ஆழ்வார் இட்ட திருநாமமாகும்.

திருவாய்மொழி ஆரும்பத்து மூன்ரும் திருவாய்மொழி ஒன்பதாவது பாசுரத்தில் நம்மாழ்வார் இந்த அப்பனை எட்டுத் தடவை அப்பனே, அப்பனே என அழைத்து அடியேன், இவ்வாறு அலமாந்து கூப்பிட்டஅன்றே, அன்று யானையைக் காக்கப் பதறி வந்ததுபோல் வந்து, அடியேனுக்கு முன் தம் திருவடி நிழல் காட்டினன் என மகிழ்கிருர். பிறந்த குழந்தை முதன் முதலில் பால் சுரக்கும் தாயின் மார்பில் வாய் வைப்பதுபோல், தாமும் அவ்வள்ளலின் அருள் பாயும் திருவடியிலே திருவாய்மொழி இட்டார்.

''என்னப்பன் எனக்கு ஆய் இகுள் ஆய்
என்னைப்பெற்ற வளாய்,
பொன்னப்பன், மணிஅப்பன்,
முத்தப்பன், என்னப்பனுமாய்
மின்னப்பொன் மதிள்சூழ்
திருவிண்ணகர் சேர்ந்தஅப்பன்
தன் ஒப்பாரில்லப்பன்
தந்தனன் தன தாள்நிழலே''

திருவிண்ணகரமாகிய ஒப்பிலிஅப்பன் கோயிலில் எழுந்தருளி இருக்கும் எம்பெருமான் அடியேனுக்குத் தந்தையாய், செவிலித்தாயாய், பெற்றதாயாய், எவ்விதத்திலும் உற்றவனுய் என்றும் இருப்பதோடு நில்லாமல், ஈண்டு என் புறக் கண்களுக்கும் இலக்காகப் பொன்மதிள் சூழ் திருவிண்ணகரிலே எழுந்தருளித் தமக்குத் தாமே ஒப்பிட முடியாத பெருமை பெற்றவனுகிச் சிவுக்கென என் ஆர்த்தி கண்டு என் தாபங்கள் முற்றும் தீரத் தம் திருவடி நிழலைக் காட்டிக் கொடுத்தானே! அந்தோ அவன் கருணை என்னே! என்கிருர்.

**நம்மாழ்வார்:**

தாம் அவதரித்தது முதல் பன்னிரண்டு யோகியாய், மோனநிலையில் இருந்த ஆழ்வார், தம் திருக்கண் விழித்து மோன நிலையை நீக்கியதுமே, அமுதும் கசக்கும் என்னும்படியான ஆராவமுதத் தமிழ்ப் பாக்களை அருளிச் செய்யும் நல்லடிக் காலம் வந்தது. உடனே நூற்றெட்டுத் திருப்பதிகளுடன் சிலர், திருக்கோயிலுடன் சிலர், கருவறை மட்டுடன் சிலர், விமானத்துடன் மட்டும் சிலர், தம் ஊர்ப்புறத்துடனும் சிலர் எழுந்தருளி, ஆழ்வார் அமர்ந்திருந்த புளிய மரத்தின் கீழ்த் தமிழ்ப்பாக்களின் பரிசு பெறக் காத்திருந்தார்களாம். அவ்வமயம் சில எம்பெருமான்கள், தமது திருமேனி மட்டும் காட்டும்போது, சிலர் ஆழ்வார் விரும்புவது திருவடியாதலால் திருவடிகளை மட்டும் காட்டினுர்கள். அப்புடையில் நம் திருவிண்ணகர் அப்பன், தம் திருவடி நிழலை ஆழ்வாருக்குக் காட்டினுர். விடாய்த்தவன் களைதீர அப்பா அல்லது அம்மே என்பான்போல், ஆழ்வாரும் விடாய்தீர அப்பனே அப்பனே என வாய் வெருவி நின்ருர். என்னப்பன், பொன்னப்பன், மணிஅப்பன், முத்தப்பன், அப்பன், திருவிண்ணகர் சேர்ந்த அப்பன், தன்னெப்பாரில்லப்பன் எனக் கதறுகிருர்.

**பொருள்நுட்பம்:**

தாயும் தந்தையுமாய் அவன் நின்றது பெருமை இல்லை. அவன் செவிலித் தாயாகவும் ஆனனே என்பது சுவைமிக்கது. குழந்தைக்குப் பணிவிடை செய்பவளன்ருே செவிலி? அவள் தமக்குத் தம் திருவடியைக் காட்டித் தந்தது மோட்சம் என்ற பேரின்பத்தின் பெரும் பயனுகிய அத்தாணிச் சேவகம் புரியவே. ''முத்தே, மணி மாணிக்கமே, நினைக்கின்ற வித்தே'' என்று திருமங்கை ஆழ்வாரின் அருள் வாக்கு. கலப்பற்ற தூய தங்கத்தை, சாதரூபம் ஆடகம் சாம்பூநதம், கோகநதம் என்பார்கள். ஒவ்வொன்றும் தனித்தன்மை கொண்டது. இவ்வெல்லாப் பெருமைகளையும் பெற்றதே பொன் ஆகும். தங்கம் அடிக்க அடிக்க வளையக்கூடியது ஆனுல் பிளக்க இயலாதது. அதுபோல் எம் பெருமானும் பக்தர்களுக்காகத் தாழ நின்று தகவு காட்டினுலும், அவனது ஆற்றலும் வீரமும் பிளக்க முடியாதது என்பதையும் காட்டினுர். மணிகள் மக்களின் திறத்துக்குத் தக்க விலைபெறும். கடலிலிருந்து எடுத்த ஒரு மணியை மீனவன் கடையிலே கேட்ட விலைக்குக் கொடுப்பன். கடைக்காரன் அந்த இரத்தினத்தின் சிறப்புத் தெரிந்தவனிடம் விலை கூட்டிக் கொடுப்பன். அதே மணியைக் கோழி கீழே கிளறித்தள்ளும். யார் யார் அவரவர்களின் பண்புக்கும் பாக்கியத்திற்கும் தக்கபடி எம் பெருமானை ஏசினுலும் பேசினுலும், அவனது அளவற்ற பெருமை என்றும் மாசு மாருது என்பதையும், மணியை ஒருவன் ஆடையில் முடிந்து விலை கூற முடியுமாப் போலே, அடியார்க்கு நல்லவரான எம்பெருமானையும் பக்தர்கள் தாமிட்ட வழக்காக ஆக்கப் பயன்படுபவன் என்பதையும், அதே நேரத்தில் அணிகளைப் பேழையில் இட்டுக் காப்பதுபோல், அப் பரம் பொருளையும் என்றும் தூய உள்ளமாகிய நம் மனப் பேழையில் வைத்து வணங்கிக் காக்க வேண்டும். என்றெல்லாம் பொருள்காணும் வகையில் மணி என எம்பெருமானை அழைத்தார்.

முத்திபெற்ற முத்தர்கள் போற்றும்படி, முத்துப்பழமான அப் பரம்பொருள், நூலில் இழையிடத் தக்கவராய் அடியோர் நூலாகிய திருவாய்மொழியில் முத்தென அமர்ந்தானே என்றும் பொருள்படும்படிக்கு, அவனை முத்தே என்ருர். அவன் ஆழ்வாருக்கு மட்டும் தன் திருவடியைக் காட்டினது மட்டுமின்றி, இன்று அந்த ஒப்பிலா அப்பனை வணங்கிடுவார் அனைவருக்கும் தமது இடது திருக்கையால் திருவடி காட்டி நிற்கும் அருமையும், நிலமகள் நமக்கு அறிவுறுத்துவதுபோல், அவள் பொன்னடி வாரத்தில் மண்டியிட்டிருப்பதும் இன்றும் கண்டு களிக்கத்தக்கதாகும். **

# அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில்



## இராமேசுவரம்

## வருக ! வருக !! இராமேசுவரத்திற்கு இனிதே வருக !!!

இராமாயணம் என்ற இதிகாசம் கண்ட இனிய தீவு இராமேசுவரம். வரலாற்றுச் சிறப்புடைய மிகப் பெரிய கோயிலைக் கொண்டது. இந்தியாவிலேயே பன்னிரண்டு சோதிலிங்கத் தலங்களுள் ஒன்று இராமேசுவரம். இந்தியாவின் தேசிய ஒருமைப் பாட்டின் சின்னமாய் விளங்குவது இத்திருக்கோயில். மேலும் பழங்காலச் சிற்பக் கலையின் சீர்மைக்கு, உலகப் புகழ் வாய்ந்த மிகப் பெரிய மூன்றும் பிராகாரமும், அதன் சிற்பச் சிறப்பும் உள்ள இத்திருக்கோயில் ஒரு கருவூலம் ஆக விளங்குகின்றது.

பிரயாணிகள் தங்குவதற்கான நவீன வசதிகளுடன் கூடிய விடுதிகளைத் தேவஸ்தானம் அளித்து வருகிறது.

சிறப்பு வழிபாட்டிற்கான கட்டண விவரங்கள் :—

| | |
|---|---|
| வெள்ளி ரத ஊர்வலம் .... .... .... | ரூ. 500—00 |
| தங்கப் பல்லக்கு .... .... .... | ரூ. 200—00 |
| தங்க ரிஷப வாகனத்தில் சுவாமி புறப்பாடு .... | ரூ. 300—00 |
| சகஸ்ரகலச அபிஷேகம் .... .... .... | ரூ. 1000—00 |
| ருத்ராபிஷேகம் .... .... .... | ரூ. 125—00 |
| கங்காபிஷேகம் .... .... .... | ரூ. 5—00 |
| கங்காபிஷேகம் (கங்கைநீர் உள்பட) .... | ரூ. 7—00 |

யாத்திரிகர்கள், புனிதமான கோடித் தீர்த்தம், தெய்வத் திருவுருவப்படங்கள், பிரசாதங்கள் இவற்றைத் திருக்கோயில் விற்பனை நிலையங்களில் மட்டும், வாங்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இராமநாத சுவாமிக்கும், பர்வத வர்த்தினி அம்பாளுக்கும், தனித் தனியே ரூ. 10.00 செலுத்திச் சகஸ்ர நாம அர்ச்சனை செய்யலாம். பூசை செய்து பிரசாதம் அஞ்சல் வழியில் அனுப்பப்பெறும்.

நிரந்தரக் கட்டளைகள் :—

ரூ. 1,500-00 செலுத்தினல், ஒவ்வொரு ஆண்டிலும் குறிப்பிட்ட தினத்தில் ருத்ராபிஷேகம் இராமநாத சுவாமிக்குச் செய்து அருட்பிரசாதம் அனுப்பப்படும். இவ்வாறே ரூ. 100-00 செலுத்தினல் இராமநாதநாத சுவாமிக்குக் குறிப்பிட்ட தினத்தில் கங்காபிஷேகம் செய்து அருட் பிரசாதம் அனுப்பப்படும். ரூ. 500-00 செலுத்தினல் ஒரு கால பூசை இராமநாத சுவாமிக்கு நடத்திப் பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

கோயில் திருப்பணிக்கு நன்கொடை அளிக்கும் தொகைக்கு வருமான வரி விலக்கு உண்டு.

இனிய வழிபாடு செய்வதற்கும், நலமுறத் தங்குவதற்கும், அருள்மிகு இராமநாத சுவாமி தேவஸ்தான நிர்வாக அலுவலரை அணுகுக.

**ஆர். திருவேங்கடசுவாமி,**
உதவி ஆணையர்/நிர்வாக அதிகாரி.
அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில், இராமேசுவரம்.

# திருக்கச்சி நம்பிகள்

திரு. எஸ். இராமசுவாமி, B. Com.,

புதுக்கோட்டை

## ஆலவட்டத் தொண்டு :

திருக்கச்சி நம்பிகள், இராமாநுசரின் காலத்தில், அவரினும் வயதில் மூத்தவராக வாழ்ந்திருந்த ஒரு வைணவப் பெரியவராவர். இவர் அவதரித்த தலம், சென்னைக்கு அருகிலுள்ள பூந்தண்மலியாகும். இவரது இயற்பெயர் கஜேந்திரதாசர். வணிக குலத்தில் கமலா என்ற தாயாருக்கும், வீரராகவர் என்னும் தந்தையாருக்கும், நான்காம் மைந்தராகப் பிறந்தார். மாதவனுக்கு மலர்த் தொண்டும், ஆலவட்டத் தொண்டும் செய்வதில் ஈடுபட்ட அவர், தம் வாழ்நாள் முழுவதும் அக் கைங்கரியத்தைச் செய்து வந்தவர். இவர் திருவரங்கத்திலிருந்து கொண்டு, அருளாட்சி புரிந்து வந்த ஆளவந்தார் என்னும் வைணவப் பெரியாரின் சீடராக விளங்கினர். தனது குருவுடன் திருவரங்கத்தில் தங்கியிருந்து அணியார் பொழில் சூழ் அரங்க நகர் அப்பனுக்கு, ஆலவட்ட கைங்கர்யம் பரிமாறி வந்தார்.

## பேரருளாளப் பெருமாள் :

தென்னுடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கேசனும், கங்கையிற் புனிதமாய காவிரிக் கரையில் குளிர்ச்சியாகப் பள்ளி கொண்டுள்ள தமக்கு ஆலவட்ட கைங்கர்யம் வேண்டாம் என்று கூறவே, இவர் விண்ணோர் தொழும் வேங்கட மாமலை மேய அண்ணனுக்கு ஆலவட்டம் வீசத் தொடங்கினர். ''ஆடு தாமரையோனும் ஈசனும் அமரர்கோனும் நின்றேத்தும் வேங்கடத்து ஆடு கூத்தனும்'' நம்பியை நோக்கி, ''நம்பி! இப்பகுதி குளிரருவி வேங்கடம் ஆகவே, இங்கு இயல்பாகவே குளிர் அதிகமாக உள்ளது ; அதனுல் எனக்கு ஆலவட்டம் வீச வேண்டாம்; கல்லுயர்ந்த நெடு மதில் சூழ் கச்சியம்பதியில், தேனெடுத்த சோலைகள் சூழ் திருவத்திகிரியின் உச்சியில், அசுவமேத வேள்வியில் தோன்றிய அருளாளப் பெருமாள் வேள்வித் தீயில் பிறந்த தம் வெப்பம் தீர, உமது ஆலவட்ட கைங்கர்யத்தை விரும்புவார். அங்குச் சென்று இக் கைங்கர்யம் புரியலாம்'' என்று இவரை அனுப்பி வைத்தார். இவரும் இறைவன் ஆணையைச் சிரமேற் கொண்டு கச்சியம்பதி ஏகி, அங்கேயே நிலையாகத் தங்கிப் பேரருளாளப் பெருமாளுக்கு ஆலவட்ட கைங்கர்யப் பணியை மேற்கொண்டார். அதனுல் அவருக்குத் ''திருக்கச்சி நம்பிகள்'' என்னும் பெயர் அமைந்தது. பேரருளாளப் பெருமாளுடன் நேரில் பேசும் பெருமையும் பெற்றிருந்தார்.

## தொண்டர் சேவடிச் செழுஞ்சேறு :

திருக்கச்சி நம்பிகள் தினந்தோறும் நீராட வேகவதி நதிக்குப் போவார். அப்போது வள்ளுவ குல வைணவன் இராகவனும் அங்குப் போவான். அவன் பக்தியின் மிகுதியினுல் வெகு தூரத்தில் நின்று கொண்டு நம்பிகளின் திருவடிகளைச் சேவித்துக் கொண்டேயிருப்பான். நம்பிகள் அவ்விடம் விட்டு அகன்றதும் அவர் திருவடிகளால் மிதியுண்ட மணற் பொடிகளை எடுத்துத் தன் தலையில் தரித்துக் கொள்வான். இப்படி அநேக நாட்கள் நடந்து வந்தது. ஒரு நாள் நம்பி அவ்வைணவனை நோக்கி ''ஏனப்பா, நீ தினந்தோறும் நான் நீராடும் போது எனது திருவடிகளைச் சேவிக்கின்ருய். எனது கால்களால் மிதியுண்ட மணற் பொடிகளை எடுத்து உனது தலையில் தரித்துக் கொள்கிருய். ஏன் இப்படிச் செய்கிருய்'' என வினவினர். அவன் நம்பியை நோக்கி ''சுவாமி! அடியேன் சீலமில்லாச் சிறியேன். தவத்துள்ளார் தம்மில் அல்லேன். தனம் படைத்தாரில் அல்லேன் என்றபடி நான் தவத்துள் சிறந்தவனுமல்ல; செல்வத்தின் மிகுந்தவனுமல்ல.''

''குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்
நலங்களாய நற்கலைகள் நாலும் நவின்றிலேன்
புலன்களைந்தும் வென்றிலேன் பொறியிலேன்
புனித நின்
இலங்குபாத மன்றி மற்றோர் பற்றிலேன்எம்
ஈசனே!

(திருச்சந்த விருத்தம்—90).

என்று திருமழிசைப் பிரான் அருளிச் செய்த நிலையில் நிற்பவன் அடியேன். ஆனுல் அடியேனுக்கு ஒரு நம்பிக்கை உண்டு. பெரியோர்களுக்குச் சித்திக்கும் பேற்றைப் பார்த்து எனக்கும் அப்பேறு பெற ஆசை கரை புரண்டோடுகிறது. எனது ஆசை நிறைவேற, அமரர் தொழும் அத்திகிரி அம்புயத் தாள் ஆர் அமுதான அருளாளப் பெருமாள் அருள் வேண்டும். அது அடியேனுக்கு எளிதில் கிடைக்கக் கூடியதல்ல. தேவரீர் பேரருளாளப் பெருமாள் உள்ளத்திற்கு உகப்பாகத் தினமும் திருவாலவட்டக் கைங்கர்யத்தில் உகப்பித்து, நேரில்

வார்த்தையாடிக் கொண்டிருக்கிற உத்தமரா கையாலே தேவரீருடைய திருவடிப் பொடியே அடியேனுக்கு இருக்கும் அவாவைத் தலைக்கட்டி வைக்குமென்று இங்ஙனம் செய்கிறேன். ''தொண்டர் சேவடிச் செழுஞ்சேறு என் சென்னிக்கு அணிவனே'' என்று அடியார்களின் திருவடிகளால் துகையுண்ட சேற்றைத் தனது நெற்றிக்குத் திலகமாக இட்டுக்கொள்ளவேண்டு மென்று கோழிக்கோன் குலசேகரன் அருளிச் செயலை அடியேன் பின்பற்றி நிற்பவன். அதனால் நான் உங்கள் திருவடிபட்ட மணலை என் தலையில் தரித்துக் கொள்கிறேன். அடியேன் இப்படிச் செய்வது தகுதியில்லை என்றால் வேறு எந்த விதத்தில் அடியேன் ஆசை நிறைவேறப் பெறுமென்று பெருமாளைக் கேட்டுத் தெரிவியுங்கள் என்று சொன்னான்.

## பேரருளாளன் பேரருள்:

என்றும் போல் அன்றிரவு திருக்கச்சி நம்பி திருவத்திகிரி திருமாலுக்குத் திருவாலவட்டம் பரிமாறிக் கொண்டே அன்று பகலில் நடந்த விஷயங்களை விண்ணப்பித்தார். அத்திகிரி அருள் முகிலான அருளாளப் பெருமாள், நம்பி விண்ணப்பித்த செய்திகளைக் கேட்டுப் புன்முறுவல் செய்து ''மருவாரும் திருமல்லி வாழ வந்தோனே! மாசி மிருக சீரிடத்தில் வந்துதித்தோனே! நம்பீ! நம் அடியார் அடிப்பொடி அவன் தலைமேலிருக்கையில் பேற்றில் என்ன சந்தேகம்.

''மணியின்அணி நிறமாயன் தமரடி நீறுகொண்டு,
அணிய முயலின் மற்றில்லை கண்டீர்......''

*(திருவாய்மொழி 4—6—6).*

பேற்றுக்கு என்பதை அறியீரா?'' என்று சோதி வாய் திறந்து அருளிச் செய்தார். திருக்கச்சி நம்பியும் மறுநாள் காலையில் நீராடச் செல்லும் பொழுது பாதையில் தமக்காகக் காத்துக் கொண்டிருந்த வைணவனைப் பார்த்து 'உனக்குப் பேறு சித்தமாயிருக்கிற தென்று நேற்றிரவு அந்தமிலா அருளாழி அத்திகிரித் திருமால் தெரிவித்தார்'' என்று கூறினார்.

## பேற்றில் சந்தேகமுண்டு :

இச் சந்தோஷச் செய்தியைக் கேட்ட வைணவன், ''மெய்யருள் செய்திடுந் திருமால் வேழமலை மேயவனே'' என்று தன் மனத்தினுள் மகிழ்ந்து, நம்பியை நோக்கி, அழகார்ந்த பூவிருந்தமல்லியில் கடுக வந்து அவதரித்தவரே! அரங்கர் முதல் மூவரையும் அனவரதம் சேவித்துப் பாவித்த பரம பக்தரே! அருளாளருடன் மொழி சொல் அதிசயித்தோனே! திருவாலவட்டம் செய்து சேவிப்போனே! தெருளாரும் ஆளவந்தார் திருவடியோனே! தேவரீர் மகிமையால் அன்றோ அடியேனுக்கு இப்பேறு கிடைத்தது. அடியேனுக்கு ஒரு ஆசை. தேவரீருக்குப் பேறு கிடைக்கும் காலத்தையும் அடியேன் அறிந்து கொண்டால் அருகிலிருந்து சேவிக்கலாமென்று ஆசைப்படுகிறேன். ஆகையால் இதையும் பெருமாளிடம் விண்ணப்பித்து அத்திகிரிப் பெருமாள் திருவுள்ளம் அறிந்து அடியேனுக்குத் தெரிவிக்கப் பிரார்த்திக்கிறேன்'' என்று கூறினான்.

திருக்கச்சி நம்பியும் இதனை எப்படிக் கேட்பதென்று சிந்தித்துக் கொண்டே, பெருமாள் கோயிலுக்கு வழக்கப்படி சென்று, திருவாலவட்ட கைங்கர்யம் செய்து கொண்டிருக்கையில் பேரருளாளப் பெருமாள் நம்பியை நோக்கி ''கஜேந்திரதாசரே! பார்க்கவப் பிரியரே! காஞ்சிபூர்ணரே! அந்த வைணவனுக்கு எம் திருவுள்ளக் குறிப்பைத் தெரிவித்தீரா?'' என்று கேட்டார். நம்பியும் ''தெரிவித்தேன்'' என்றார். உடனே கருத வரந்தரு தெய்வப் பெருமாள், ''நம்பீ! அதற்கு அவன் என்ன சொன்னான்?'' என்று வினவினார். நம்பியும் வைணவன் கூறியதை விண்ணப்பித்தார். தேவாதிராஜனும் நகைத்து நம்பியை நோக்கி, ''நம்பீ! நீ வீசினாய்; நான் பேசினேன். ஆனால் ஒன்று, நமது அபிமானமும் ஆசாரியாபிமானமும் சிறப்புடையவைகளே யாயினும், பாகவத அபிமானமே பேற்றுக்கு உபாயமாக இருப்பது. அதில்லார்க்குப் பேற்றில் சந்தேகமுண்டு என்று சொல்லவும் வேண்டுமோ?'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

## ''மாடு மேய்க்கும் வேலை'' :

அருளாளப் பெருமாள் கூறியதைக் கேட்டு, அப்பொழுதே திருக்கச்சி நம்பிகள், பாகவத அபிமானத்தைப் பெறச் சிறப்புடைய மறையவர் வாழ் திருவரங்கம் சேர்ந்து, தாம் தரித்திருந்த பரிவட்டங்களைக் களைந்து பத்திரப்படுத்தி வைத்துவிட்டு மாடு மேய்ப்பவனைப் போல் வேடம் பூண்டு பெரிய நம்பிகளிடத்தில் வேலையில் சேர்ந்தார்.

இப்படி அநேக நாட்கள் கழிந்தன. ஒரு நாள் பெரிய நம்பிகள் கிராமாந்தர சஞ்சாரம் செய்ய உத்தேசித்து வண்டியில் மாட்டுக்காரனுடன் கிராமம் போய்த் திரும்பி வருகையில், அந்திப் பொழுது ஆகிவிட்டது. பெருங் காற்று அடித்தது. அத்துடன் பெரு மழையும் பெய்ய, பாதையெல்லாம் ஒரே வெள்ளப் பெருக்கு ஏற்பட்டது. அப்போது வண்டி ஓட்டி வந்த திருக்கச்சி நம்பிகள், ஒரு கையில் மாடுகளின் தலைக் கயிற்றைப் பிடித்துக் கொண்டு, மற்றொரு கையில் விளக்கை ஏந்திக் கொண்டு, முற்றிலும் நனைந்து வழிகாட்டி வண்டியை நடத்திக் கொண்டு வந்தார். சேற்றுப் பாங்கான இடங்களில் வண்டியின் சக்கரங்கள்அழுந்தினபோதெல்லாம், அவரே தோள் கொடுத்துத் தள்ளி அதிக சிரமத்துடன் பெரிய நம்பிகளை வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தார். வீடு வந்து சேர்ந்ததும் பெரிய நம்பிகள் உள்ளே போய் ஆடைகளை மாற்றிக் கொண்டிருந்தார். திருக்கச்சி நம்பி மாடுகளைப் பிடித்து ஒரு பக்கமாய்க் கட்டிவிட்டு, அடுத்த வீட்டுத் திண்ணை மேலேறி நனைந்த ஆடைகளைப் பிழிந்து, காற்றில் ஆறும்படி காட்டினார். தமக்கு வேறு உடைகள் இல்லாததால், தாம் காஞ்சிபுரத்திலிருந்தபோது அணிந்து கொண்டிருந்த பரிவட்டங்களை எடுத்து உடுத்திக்கொண்டு, ஒரு மூலையில் ஒதுங்கியிருந்தார்.

## 'ஆதரியாமல் விட்டீரே?' :

இதற்குள் உள்ளே ஆடை மாற்றிக் கொண்ட பெரிய நம்பிகள், நல்ல துணிகள் இரண்டு கையில் எடுத்துக் கொண்டு இடைகழிக்கு வந்து, வண்டி ஓட்டி வந்த மாட்டுக்காரனைத் தேடினார். அவன் அகப்படவில்லை. மனம் தளர்ந்துபோய்ச் சமையற்காரரைக் கூவி ''நம்ம மாட்டுக்காரன் இந்த மழையில் உடம்பெல்லாம் நனைந்து நம்மைக் காப்பாற்றிக் கொண்டு வந்து திருமாளிகை சேர்த்ததினால் அன்றோ, நீர் நம்மைக் காண முடிந்தது; அவனை ஆதரியாமல் விட்டீரே?'' என்று துக்கப்பட்டார்.

## எப்படி மறைந்தீர் :

பின்பு பெரிய நம்பிகளே அந்த மழையில் குடைகளை ஒரு கையிற் பிடித்துக் கொண்டு, விளக்கை மற்றக் கையில் ஏந்திக் கொண்டு, வெளியே புறப்பட்டு ''மாட்டுக்காரா! மாட்டுக்காரா!'' என்று கூவிக்கொண்டே, இரண்டு மூன்று அடி பெயர்ந்து நடந்தார். அடுத்த திண்ணையில் குளிருக்கு ஒதுங்கியிருந்த திருக்கச்சி நம்பிகள், இதைக் கேட்டுக் குதித்தோடி வந்து தெண்டன் சமர்ப்பிக்க, பெரிய நம்பிகள் ஆச்சர்யப்பட்டு, ''இந்த வேடத்தை இத்தனை நாளும் எப்படி மறைத்து ஏமாற்றினீர்? காஞ்சி பூர்ணரே'' என்று வினவி, அவரைத் திருமாளிகைக்குள்ளே இட்டுப்போய் இப்படிச் செய்ததற்குக் காரணம் யாது என்று கேட்டுத் தெரிந்து கொண்டார். பின் காஞ்சிபுரம் திரும்பி வந்து, திருக்கச்சி நம்பிகள் முன்போல் பேரருளாளப் பெருமாளுக்கு, திருவாலவட்டம் வீசும் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்தார்.

## பாகவத அபிமானம் :

ஆகவே நாம் மேல்வீடு பெற ஆசார்ய அபிமானமே உபாயம் என்பதை உபதேச ரத்தினமாலையில் மாமுனிகள்,

''ஞானம் அனுட்டானம் இவை நன்றாகவே யுடையன்
ஆன குருவை அடைந்தக்கால்-மாநிலத்தீர்!
தேனார் கமலத் திருமா மகள்கொழுநன்
தானே வைகுந்தம் தரும்''

(உபதேச ரத்தினமாலை—61).

என்று காட்டியருளினார். பிள்ளை உலகாசிரியரும் சீர் வசன பூடணத்தில் ''ஆசார்ய அபிமானமே உத்தாரகம்'' என்று காட்டி, அந்தத் திவ்யக் கிரந்தத்தின் முடிவில், ''பக்தியில் அசக்தனுக்குப் பிரபத்தி; பிரபத்தியில் அசக்தனுக்கு இது. இது பிரதமம் ஸ்வரூபத்தைப் பல்லவிதமாக்கும்; பின்பு புஷ்பிதமாக்கும் ; அநந்தரம் பலபர்யந்தமாக்கும்'' என்று அருளிச் செய்துள்ளார்.

**திருக்கச்சி நம்பி திருவடிகளே சரணம்!**

**எம்பெருமானார் திருவடிகளே சரணம் !!**

# கவிதை நல்லாள்

இலக்கணத்தில் வல்லவனைத் தந்தை எனக்
கொண்டணுகாள் ; தருக்கம் என்னும்
உலப்பிலியல் உணர்ந்தவனை உடன்பிறந்தான்
எனக்கலவாள்; உயர்ந்த சந்த
நலத்திறமே கணிப்பவனை நனிவெருள்வாள்;
மீமாஞ்சன் நபும்சன் என்பாள்;
கலைத்திறஞ்சேர் கவிதைநல்லாள், காப்பியச்சீர்ச்
சுவைஞனையே காத லிப்பாள்!

—தேசபக்தர் திரு. வ. வே. சு. ஐயர் அவர்கள் காட்டிய
வடமொழி மேற்கோட் சுலோகம் ஒன்றின் தமிழாக்கம்—ந. ரா. முருகவேள்.

# சிறந்த நற் கவிதை

வித்தகப் பொருளின் மாட்சி, வியத்தகு சொல்லின் ஆட்சி,
மெய்த்திறம் திட்பம் நுட்பம் விளக்கம், மற் றியாவும் மேவி,
எத்தனை முறைகற் றாலும், எழில்நலம் மேன்மேல் ஓங்கித்
தித்திக்கும் பாடல் தானே, சிறந்தநற் கவிதை ஆகும் !

—தமிழாக்கம், ந. ரா. முருகவேள்.

**Read it a hundred times, it will for ever keep its freshness, as a petal keeps its fragrance." —ROBERT FROST.**

# வைணவத் திவ்விய தேசங்கள்

**முன்னுரை :**

நமது இந்தியப் பாரத தேசம் உலகிலேயே மிகவும் ஒப்புயர்வற்ற சிறப்புடையது. பிற தேசங்களை நோக்க, நமது இந்தியப் பாரதநாடு மிகவும் புண்ணிய பூமியாகும். தொன்று தொட்டுப் பெரியவர்கள் பலரும் இதனை உணர்ந்து வலியுறுத்தியிருக்கின்றார்கள். *வினைப் பயன்களை நுகரவும், இறையருளைப் பெறவும், பெருந்தகைமை கொடைவண்மை தூய்மை, அமைதி உள்ளொளி ஆன்மிகம் முதலிய உயரிய குண நலன்களைப் பெறவும், இப்புண்ணிய பூமியிற் பிறப்பது பெருந்துணை புரிகின்றது. எனவே, தேவர்களும் இப்புண்ணிய பூமியில் வந்து பிறக்க விரும்புகின்றனர் என்கிறார் மணிவாசகர். இங்ஙனம் விண்ணுலகத்துத் தேவர்களும் மண்ணுலகிற் போந்து வழிபட்டுள்ள தலங்கள் எண்ணில்லாத பல, நம் பாரத தேசத்திலும், தமிழ் நாட்டிலும் உள்ளன.

அத் தெய்வத் திருத்தலங்களின் பெருமையை அறிந்து கொள்ளவும், அங்கெல்லாம் சென்று கண்டு இறைவனைத் தரிசித்து வழிபட்டு உய்யவும், நாம் முயலுதல் வேண்டும். தெய்வத் திருத்தலங்களின் சிறப்பும், தல வழிபாட்டின் மேன்மையும், நாம்பெரிதும்உணர்ந்து போற்றுதற்குரியன. ஆழ்வார்களும், நாயன்மார்களும் தலயாத்திரை செய்து, தலங்கள் தோறும் சென்று, இறைவனைப் பாடிப் பரவி வழிபட்டு மகிழ்ந்திருக்கின்றனர். அத்தகைய அருளாளர்களும் ஞானிகளுமே, தலயாத்திரையையும் தலவழிபாட்டையும் இன்றியமையாப் பெருஞ்சிறப்பியற் கடமையாகக் கருதிக் கடைப்பிடித்திருக்கின்றனர் என்றால், நம்மனோர்க்கெல்லாம், தலவழிபாடு எவ்வளவு முதன்மை வாய்ந்தது என்பதனைச் சொல்ல வேண்டுவதில்லை.

* "To-day I stand here and say, with the conviction of truth, that this is the Punya Bhumi, the land of Karma. If there is any land on earth that can lay claim to be the blessed Punya Bhumi, to be the land to which all souls on this earth must come to account for Karma, the land to which every soul that is wending its way Godward must come to attain its last home, the lard where humanity has attained its highest towards gentleness, towards purity, towards calmness, above all, the land of introspection and of spirituality, its abode is INDIA."

—**Swami Vivekananda.**

**தலயாத்திரை :**

தலயாத்திரையும் வழிபாடும் மேற்கொள்ளுவதனால், நாம் எய்தும் நலங்களுக்கு அளவேயில்லை. துன்பமும் துயரமும் நிறைந்த இவ்வுலகில், நம்முடைய குறுகிய வாழ்நாளில் நாம் அடையக்கூடிய ஏதோ ஒரு சில சிறு இன்பங்களில் உண்மையானதும், உயர்ந்ததும் ஒப்புயர்வற்றதும் தலயாத்திரைகளால் பெறும் இன்பமே எனலாம். தலயாத்திரையால் நாம் நம் கவலைகளை மறக்கின்றோம் ; நம் மாசுகள் அகன்று ஓரளவேனும் புனிதம் அடைகின்றோம். காணாத இடங்களையும் காட்சிகளையும் கண்டு களிக்கின்றோம். கேளாத செய்திகள் பலவும் கேட்டு உணர்ந்து கிளர்ச்சியும் வளர்ச்சியும் பெறுகின்றோம்.

நாட்டின் பல பகுதிகளில் உள்ள பல மக்களைக் கண்டு பழகி, நாட்டு வளப்பங்களை அறிந்து கொள்கின்றோம். தலவழிபாட்டால் நம் உள்ளமும் உணர்வும், புத்துணர்ச்சியும் எழுச்சியும் பெறுகின்றன. நம் உள்ளம் விரிவடைகின்றது. உணர்வு பண்படுகின்றது. இறையருளும் பக்தியும் படிமுறையே நம்மிடம் வளர்ந்து ஓங்குகின்றன. நாம் நம் முன்னோர்களுடைய அருமை பெருமைகளையும், அழகிய வரலாறுகளையும், அரும்பெரும் செயல்களையும் கண்டும் உணர்ந்தும் களிப்புறுகின்றோம்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் போன்ற சான்றோர்கள் பாடிய சிறந்த திருத்தலங்களுக்குச் சென்று தரிசிக்குங்கால், நமக்கும் அவர்களின் அருளாற்றல் ஓரளவு பதிகின்றது. காலமும் இடமும் வேறுபட்டுக் கடந்திருப்பினும், நாம் அவர்களோடு மானதத் தொடர்பு கொள்ளுகின்றோம். அவர்களை நாம் நேரே காண இயலா விட்டாலும், அவர்களின் தொடர்பு பெற்ற தலங்களையும், கோயில்களையும் காணுகின்ற போது, ஒரு வகையில் அவர்களை நேரே காண்பது போன்ற உணர்ச்சியும், மகிழ்ச்சியும் நமக்கு ஏற்படுகின்றன.

"மனிதன் ஒருவன் எய்துதற்காம்
வாழ்வின் இன்பம் பலவற்றுள்,
புனித நமது பாரதத்திற்
பொலியும் திவ்ய தேசங்கள்
எனும்நற் றலங்கள் கண்டுதொழும்
இன்பிற் சிறந்த தொன்றில்லை ;
நனிநன் றுயர்ந்த அப்பேற்றை
நலமே அடைய முயன்றுய்வோம்!"

''பொங்குநற் பக்தி வெள்ளப்
புணரியில் திளைத்து மூழ்கி
நன்குயர் ஆழ்வார் கள்தாம்,
நலமிகப் பணிந்தி றைஞ்சி
மங்களா சாச னம்செய்
வைணவத் தலங்கள் யாவும்,
இங்குநாம் கண்டு போற்றல்
இனியநற் கடமை யாகும்.''

—ந. ரா.மு.

திவ்விய தேச யாத்திரை செய்தலின் சிறப்பைத் திருமங்கையாழ்வார் ''பதியே பரவித் தொழும் தொண்டர் தமக்குக் கதியே'' என்பதனுல் இனிது விளக்குகின்ருர். ''கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லை என்று மண்டினுர் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே'' என்பதனுல் திவ்விய தேசங்களில் ஈடுபடாதவர்களுக்கு உய்யும் விரகு இல்லை என்றும் அவ்வாழ்வார் அருளிச் செய்கின்ருர்.

ஆதலின் பொய்கையாழ்வார் முதலாகத் திருமங்கை யாழ்வார் முடிவாக உள்ள ஆழ்வார்கள் பதின்மரும், பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்கொடியான ஆண்டாளும் பாடிய திவ்வியப் பிரபந்தங்களில், மங்களா சாசனம் செய்யப் பெற்றுள்ள நூற்றெட்டுத் திவ்விய தேசங்கள் பற்றிய சில குறிப்புகள், தலயாத்திரை புரிய விரும்பும் பக்தர்களுக்காக இங்கே தொகுத்துத் தரப்படுகின்றன.

**சோழ நாட்டுத் திருப்பதிகள், 40:**

1. திருவரங்கம்—2. உறையூர் —திருச்சிக்கு அருகில் உள்ளன.

3. தஞ்சை மாமணிக்கோயில்—(நீலமேகப் பெருமாள்); தஞ்சாவூருக்கு வடக்கே தஞ்சையாளி (நரசிம்மர்), மணிக்குன்றப் பெருமாள் (இராமர்) என்னும் இரண்டு சந்நிதிகளும் இங்கு உள்ளன.

4. அன்பில்—வடிவழகிய நம்பி. லால்குடி ஸ்டேஷனில் இருந்து ஐந்து கல். திருச்சியில் இருந்து பஸ் உண்டு.

5. கரம்பனூர் (உத்தமர் கோயில்) — திருச்சிராப்பள்ளி கோட்டை நிலையத்தில் இருந்து வடக்கே 5 கல்.

6. திருவெள்ளறை — புண்டரீகாட்சன். திருச்சி—துறையூர் பேருந்துப் பாதையில் உள்ளது.

7. புள்ளம் பூதங்குடி-வல்வில் இராமன். சுவாமிமலை-கும்பகோணத்தில் இருந்து பேருந்து உண்டு. இதற்கு அருகில் தொண்டரடிப் பொடியாழ்வார் தோன்றிய மண்டங்குடி உள்ளது.

8. திருப்பேர்நகர் (கோயிலடி) —அப்பக் குடத்தான். லால்குடியில் இருந்து ஆறு கல்.

9. ஆதனூர்—ஆண்டு அளக்கும் ஐயன். சுவாமிமலையில் இருந்து 2 கல்.

10. திருவழுந்தூர் (தேரழுந்தூர்) —ஆமருவியப்பன். மாயூரம்-கும்பகோணம் இருப்புப் பாதையில், குத்தாலம் நிலையத்திற்கு அடுத்தது.

11. சிறுபுலியூர்—அருமாகடல். கொல்லுமாங்குடி நிலையத்தில் இருந்து ஒரு கல்.

12. திருச்சேறை—சாரநாதன். கும்பகோணத்தில் இருந்து தென்கிழக்கில் ஏழு கல்.

13. தலைச்சங்கநாண்மதியம்—நாண்மதியப் பெருமாள், வியோமஜோதி. தரங்கம்பாடி இருப்புப் பாதையில் ஆக்கூர் நிலையத்தில் இருந்து இரண்டு கல்.

14. திருக்குடந்தை—சாரங்கபாணிப் பெருமாள், ஆராவமுதர். கும்பகோணம்.

15. கண்டியூர்—அரசாபம் தீர்த்த பெருமாள். தஞ்சை—திருவையாறு செல்லும் பாதையில் ஆருவது கல்.

16. திருவிண்ணகர்—ஒப்பிலியப்பன். கும்பகோணத்தில் இருந்து நான்கு கல்.

17. திருக்கண்ணபுரம் — சௌரிராசப் பெருமாள். நன்னிலம் நிலையத்தில் இருந்து, நாகூர் போகும் பாதையில் நான்காவது கல்.

18. திருவாலி (திருநகரி)—வயலாலி மணவாளன். சீர்காழி நிலையத்தில் இருந்து தென் கிழக்கே ஆறு கல்.

19. திருநாகை—நாகப்பட்டினம். சௌந்தரராசப் பெருமாள். நாகூர் என்னும் இசுலாமியத் தலமும், வேளாங்கண்ணி என்னும் கிறித்தவத் தலமும் இதற்கு அருகில் உள்ளன.

20. திருநறையூர் - கும்பகோணம் அருகில் உள்ளது. பேருந்து வசதி உண்டு.

21. நந்திபுர விண்ணகரம் (நாதன்கோயில்) —விண்ணகரப் பெருமாள். சகந்நாதர். கும்பகோணத்தில் இருந்து தென் மேற்கே மூன்றுகல்.

22. இந்தளூர்—பரிமளரங்கன். மாயூரம் நிலையத்தில் இருந்து கிழக்கே மூன்று கல்.

23. திருச்சித்திரகூடம் (சிதம்பரம்) — கோவிந்தராசப் பெருமாள். நடராசர் கோயிலின் உள்ளே இருப்பது.

24. காழிச் சீராமவிண்ணகரம் (சீர்காழி) — தாடாளன், திரிவிக்கிரமமூர்த்தி. சீர்காழி நகரில் உள்ளது.

25. கூடலூர் (ஆடுதுறைப் பெருமாள் கோயில்) - வையம் காத்த பெருமாள். ஐயம்பேட்டை நிலையத்தில் இருந்து வடக்கே நான்கு கல்.

26. திருக்கண்ணங்குடி - சியாமள மேனிப் பெருமாள். கீழ்வேளூர்(கீவளூர்)நிலையத்திற்குக் கிழக்கே இரண்டு கல்.

27. திருக்கண்ணமங்கை — பக்தவத்சலப் பெருமாள். திருவாரூர்க்கு வடமேற்கில் நான்கு கல்.

28. கவித்தலம்—கசேந்திரவரதர். பாப நாசம் நிலையத்தில் இருந்து வடக்கே இரண்டு கல்.

29. திருவெள்ளியங்குடி — கோலவில் இராமன். திருவிடைமருதூர்க்கு வடக்கே ஐந்துகல்.

30. மணிமாடக்கோயில்-நந்தா விளக்குப் பெருமாள், நர நாராயணர், தை அமாவாசை யில் 11 கருட சேவை. சீர்காழிக்கும் கிழக்கே ஐந்து கல்.

31. வைகுந்த விண்ணகரம் — வைகுந்த நாதன். சீர்காழிக்குத் தெற்கே ஒரு கல்.

32. அரிமேய விண்ணகரம் — குடம் ஆடு கூத்தர். சீர்காழிக்குக் கிழக்கே ஐந்து கல்.

33. திருத்தேவனூர் தொகை — தெய்வ நாயகப் பெருமாள். சீர்காழிக்குத் தென் கிழக்கே நான்கு கல்.

34 வண்புருடோத்தமம்—புருடோத்தமர். சீர்காழிக்குத் தென்கிழக்கே ஐந்து கல்.

35. செம்பொன் செய்கோயில்—பேரருளா ளர். சீர்காழிக்குக் கிழக்கே ஐந்து கல்.

36. திருத்தெற்றி அம்பலம் — செங்கண் மால். சீர்காழிக்குக் கிழக்கே ஐந்து கல்.

37. திருமாமணிக்கூடம்—மணிக்கூட நாய கன். சீர்காழிக்குக் கிழக்கே ஐந்து கல்.

38. காவளம்பாடி — கோபாலகிருஷ்ணன். சீர்காழிக்குக் கிழக்கில் ஏழு கல்.

39. திருவெள்ளக்குளம் — கண்ணன் நாரா யணன். சீர்காழிக்குத் தென்கிழக்கே ஏழு கல்.

40. பார்த்தன்பள்ளி - தாமரையாள் கேள்வன். சீர்காழிக்குத் தென்கிழக்கே ஏழு கல்.

**பாண்டி நாட்டுத் திருப்பதிகள், 18 :**

41. திருமால்இருஞ்சோலை — அழகர், கள்ளழகர். மதுரைக்குப் பன்னிரண்டு கல். நூபுரகங்கை விசேடம்.

42. திருக்கோட்டியூர் — உலகமெல்லணை யான், சௌமிய நாராயணன். சிவகங்கைக்கும், திருப்பத்தூருக்கும் அருகில் இருப்பது இராம நாதபுரம் மாவட்டம்.

43. திருமெய்யம்—சத்தியகிரிநாதன். சத் தியமூர்த்தி. திருச்சிக்குத் தெற்கே 45 கல். புதுக்கோட்டை மாவட்டம்.

44. திருப்புல்லாணி (தர்ப்பசயனம்) -கல் யாண சகந்நாதர், தெய்வச்சிலையார். இராம நாதபுரத்திற்குத் தெற்கே ஆறு கல். திருப்புல் லணை எனவும் வழங்கும்.

45. திருத்தண்கால் — தண்கால் அப்பன். சிவகாசிக்கு இரண்டு கல்.

46. திருமோகூர் - காளமேகப் பெருமாள். மதுரைக்குக் கிழக்கே ஏழு கல்.

47. திருக்கூடல் (தென் மதுரை) —கூடல் அழகர். மதுரையில் உள்ளது. பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு இக்கோயிலிலேயே பாடப்பெற் றது.

48. திருவில்லிப்புத்தூர்-வடபத்திரசயனர். அரங்கமன்னர். பெரியாழ்வார், ஆண்டாள் அவதரித்த தலம். மதுரைக்கு அருகில் உள்ளது.

49. திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி) - ஆதிநாதப்பெருமாள். பொலிந்து நின்ற பிரான். நம்மாழ்வார் அவதாரத் தலம். ஆழ் வார் திருநகர் நிலையத்தில் இருந்து ஒரு கல்.

50. தொலைவில்லி மங்கலம் (இரட்டைத் திருப்பதி)—தேவபிரான். அரவிந்த லோசனன். ஆழ்வார் திருநகரிக்குக் கிழக்கே இரண்டு கல்.

51. சிரீவரமங்கலம் (வானமாமலை, நாங்கு நேரி)-வானமாமலைப் பெருமாள். தோதாத்திரி நாதன். திருநெல்வேலி-நாகர்கோயில் பாதை யில் பதினெட்டாவது கல்.

52. திருப்புளிங்குடி — காய்சினவேந்தன். திருச்செந்தூர்க்கு அருகில் உள்ள திருவை குண்டம் நிலையத்தில் இருந்து இரண்டு கல்.

53. திருப்பேரை — மகர நெடுங் குழைக் காதர். ஆழ்வார் திருநகரிக்குத் தென்கிழக்கே மூன்று கல்.

54. திருவைகுண்டம் — கள்ளப்பிரான். திருச்செந்தூர்க்கு அருகில் உள்ள ஓர் இருப்புப் பாதை நிலையம்.

55. வரகுணமங்கை — விசயாசனர். திருவைகுண்டத்திற்குக் கிழக்கே ஒன்றரை கல்.

56. திருக்குளந்தை (பெருங்குளம்) — மாயக்கூத்தன். திருவைகுண்டத்திற்கு வட கிழக்கே ஏழு கல்.

57. திருக்குறுங்குடி — வைணவ நம்பி. சேரமாதேவிக்குத் தெற்கே பதினாறு கல்.

58. திருக்கோளூர்-வைத்தமா நிதி. மதுர கவியாழ்வார் அவதாரத்தலம். ஆழ்வார் திரு நகரியில் இருந்து ஒரு கல்.

மலைநாட்டுத் திருப்பதிகள், 13 :

59. திருவனந்தபுரம் — அனந்தபத்ம நாபன். நிலையத்தில் இருந்து ஒரு கல் தொலை வில் கோயில் உள்ளது.

60. திருவண்பரிசாரம் - திருக்குறளப்பன். திருவாழ்மார்பன். நாகர்கோயிலுக்கு வடக்கே இரண்டு கல்.

61. திருக்காட்கரை - காட்கரை அப்பன். எர்ணுகுளம் நிலையத்தில் இருந்து ஏழு கல்.

62. திருமூழிக்களம்-திருமூழிக் களத்தான். அப்பன் சூக்தி நாதப் பெருமாள். கரிக்குட்டி நிலையத்தில் இருந்து மூன்று கல்.

63. திருப்புலியூர் (குட்ட நாடு) -மாயப் பிரான். திருச்செங்குன்றூரில் இருந்து மேற்கே நான்கு கல்.

64. திருச்செங்குன்றூர் - இமையவர் அப்பன். கொட்டாரக்கரையில் இருந்து கோட் டயம் போகும் பாதையில் முப்பதாவது கல்.

65. திருநாவாய் - நாவாய் முகுந்தன். நாராயணன். திருநாவாய் நிலையத்திற்கு அருகில் உள்ளது.

66. திருவல்லவாழ் - கோலப்பிரான். கண் டாகர்ணன் அருள் பெற்ற இடம். கொட்டாரக் கரையில் இருந்து முப்பத்தாறு கல்.

67. திருவண்வண்டூர் -பாம்பணை அப்பன். கமலநாதன். திருச்செங்குன்றூரில் இருந்து கோட்டயம் போகும் பாதையில் மழுக்கூரில் இறங்கி, இரண்டு கல் செல்லுதல் வேண்டும்.

68. திருவாட்டாறு - ஆதிகேசவப் பெருமாள். நாகர்கோயிலில் இருந்து திருவ னந்தபுரம் போகும் பாதையில் 24வது கல்.

69. திருவித்துவக்கோடு - உய்யவந்த பெருமாள், அபயப் பிரதப் பெருமாள். பட் டாம்பி நிலையத்தில் இருந்து ஒரு கல்.

70. திருக்கடித்தானம் - அமிர்தநாராய ணன். அற்புத நாராயணன். திருவல்ல வாழுக்கு வடக்கே மூன்று கல்.

71. திருவாறன்விளை - திருக்குறள் அப்பன், சேஷாசனர். திருச்செங்குன்றூரில் இருந்து கிழக்கே ஏழு கல்.

நடுநாட்டுத் திருப்பதிகள், 2 :

72. திருவகீந்திரபுரம் - தெய்வநாயகன். வேதாந்த தேசிகர் இளமையில் வாழ்ந்திருந்து, அயக்கிரீவர் அருள்பெற்ற தலம். அவர் திரு மாளிகையும், திருக்கிணறும் இன்றும் உள்ளன. திருப்பாதிரிப்புலியூர் (புதிய கடலூர்) நிலையத் தில் இருந்து மேற்கே மூன்று கல் தொலைவில் உள்ள திவ்விய தேசம்.

73. திருக்கோவலூர்-திரிவிக்கிரமர். முதல் ஆழ்வார்கள் மூவரும் ஒன்று சேர்ந்து ஞான விளக்கேற்றி, வைணவம் வளர்த்த தலம். விழுப்புரம்-காட்பாடி இருப்புப் பாதையில் உள்ள ஒரு நிலையம்.

தொண்டை நாட்டுத் திருப்பதிகள், 22 :

74. திருக்கச்சி - (காஞ்சிபுரம், அத்தியூர்) - வரதராசப் பெருமாள், பேரருளாளன், பெருந் தேவித் தாயார். திருக்கச்சி நம்பிகள், எம் பெருமானுர், கூரத்தாழ்வார் முதலிய வைண வப் பெரும் சான்றோர்கள் வாழ்ந்த திவ்விய தேசம்.

75. அட்டபுயகரம் (காஞ்சிபுரம்) - ஆதி கேசவப் பெருமாள்.

76. திருத்தண்கா (தூப்புல், காஞ்சிபுரம்) விளக்கொளிப் பெருமாள். தீபப் பிரகாசர். சுவாமி வேதாந்த தேசிகர் அவதாரத் தலம்.

77. வேளுக்கை (காஞ்சிபுரம்) - அழகிய சிங்கர், முசுகுந்த நாயகன்.

78. பாடகம் (பாண்டவதூதர் சந்நிதி, காஞ்சிபுரம்)-பாண்டவதூதப் பெருமாள், உருக் குமிணி சத்தியபாமை.

79. திருநீரகம் (காஞ்சிபுரம்) - செகதீசப் பெருமாள். அக்ரூரர் அருள் பெற்ற திவ்விய தேசம். உலகளந்த பெருமாள் கோயிலில் உள்ளது.

80. நிலாத்திங்கள் துண்டம் - காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் முதல் பிராகாரத்தின் வடகிழக்கு மூலையில் உள்ள சந்நிதி.

81. ஊரகம் - காஞ்சிபுரம் உலகளந்த பெருமாள் கோயில். திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் பட்டராக இருந்து பணி யாற்றிய திவ்விய தேசம். திருவிக்கிரமர் உரகம் என்னும் ஆதிசேடனுக்கு அருள்புரிந்த தலம்.

82. திருவெஃகா (காஞ்சிபுரம்)-சொன்ன வண்ணம் செய்த பெருமாள், யதோக்தகாரி. பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், கணி கண்ணர் ஆகியவர்களுக்கு அருள்புரிந்த தலம். பொய்கையாழ்வார் இத்திவ்விய தேசத்திலுள்ள புஷ்கரிணியிலேயே அவதாரம் செய்தார்.

83. திருக்காரகம் (காஞ்சிபுரம்) - கருணு கரப் பெருமாள். உலகளந்த பெருமாள் கோயி லில் உள்ளது.

84. திருக்கார்வானம் ( காஞ்சிபுரம் ) - கள்வர் பெருமாள், நவநீத சோரன். காஞ்சி புரம் உலகளந்த பெருமாள் கோயிலில் உள்ளது.

85. திருக்கள்வனூர் (காஞ்சிபுரம்) —ஆதி வராகப் பெருமாள். இது காஞ்சிபுரம் காமாட்சி யம்மை கோயிலில் உள்ளது.

86. திருப்பவளவண்ணம் (காஞ்சிபுரம்) - பவளவண்ணப் பெருமாள். பார்வதிக்குப் பிரத்தியட்சம்.

87. பரமேச்சுவர விண்ணகரம் ( காஞ்சிபுரம்) - பரமேசுவரவர்ம பல்லவன் (கி.பி. 705-710) கட்டிய கோயில். வரலாற்றுச் சிற்பங்கள் நிறைந்த சிறப்புடையது. வைகுண்டப் பெருமாள் கோயில் என வழங்குகின்றது.

88. திருப்புட்குழி - விசயராகவப் பெருமாள். சடாயுவுக்குப் பிரத்தியட்சம். காஞ்சிபுரத்திற்குத் தென்மேற்கில் 7 கல் தொலைவில் உள்ளது.

89. திருநின்றவூர்-பக்தவத்சலர், பக்தர் ஆவிப்பெருமாள். சென்னை- அரக்கோணம் இருப்புப் பாதையில் தின்னனூர் (திருநின்றவூர்) நிலையத்திற்குத் தெற்கே ஒரு கல் தொலைவில் உள்ளது.

90. திருஎவ்வுள் ஊர் (திருவள்ளூர்) - வீரராகவப் பெருமாள், கனகவல்லித் தாயார். சென்னை-அரக்கோணம் இருப்புப் பாதையில் 26 கல் தொலைவில் உள்ளது.

91. திருநீர்மலை-நீலமுகில் வண்ணர், அரங்கநாதர். சென்னை-பல்லாவரத்திலிருந்து மூன்று கல் தொலைவில் உள்ளது.

92. திரு இட எந்தை - நித்திய கல்யாணப் பெருமாள். சென்னை மாமல்லபுரம் பாதையில் 25வது கல்லிலுள்ள திவ்விய தேசம்.

93. திருக்கடல்மல்லை (மகாபலிபுரம்)- தலசயனப் பெருமாள், ஞானப் பிரான். பூதத்தாழ்வாரின் அவதாரத்தலம். சென்னையிலிருந்து கடலோரமாகச் செல்லும் பேருந்துப் பாதையில் தெற்கே 30 மைல் தொலைவில் உள்ளது. பல்லவச் சிற்பங்கள் சிறப்பாகக் காணத் தக்கவை.

94. திருவல்லிக்கேணி - சென்னையிலுள்ள பார்த்தசாரதிப் பெருமாள் கோயில். இக்கோயிலில் மந்நாதர் என்னும் அரங்கநாதர், தெள்ளியசிங்கர் என்னும் நரசிம்மர், பரத இலக்குவ சத்ருக்ன சீதாப்பிராட்டியுடன் உள்ள இராமபிரான், கசேந்திரவரதர் சந்நிதிகள் கண்டு களிக்கத்தக்கவை.

95. திருக்கடிகை (சோளசிங்கபுரம், சோளிங்கபுரம், கடிகாசலம்)-யோக நரசிம்மர், தக்கான், அக்காரக்கனிப்பெருமாள், பக்த உசிதசுவாமி. அரக்கோணம்-காட்பாடி இருப்புப் பாதையில் சோளிங்கபுரம் நிலையத்திலிருந்து எட்டுக் கல்.

**வடநாட்டுத் திருப்பதிகள், 11 :**

96. திருவேங்கடம் (திருமலை, திருப்பதி) - சீநிவாசப் பெருமாள், ஏழுமலையான், அலர்மேல்மங்கைத் தாயார்.

97. சிங்கவேள்குன்றம் (அகோபிலம்) — ஆந்திரப் பிரதேசத்தில் நந்தியால் நிலையத்திலிருந்து 37 கல் தொலைவில் உள்ளது. இங்கு ஒன்பது நரசிம்மர்கள் எழுந்தருளியுள்ளனர். சுவாமி பிரகலாத வரதர், தாயார் இலட்சுமி நாச்சியார்.

98. திருஅயோத்தி-இராமபிரான் அவதாரத் தலம். முக்தி தரும் நகர் ஏழில் முதலாவது. சக்கரவர்த்தித் திருமகன், இரகுநாயகன், சீதைப் பிராட்டி. கல்கத்தா டேராடூன் இருப்புப் பாதையில் உள்ள ஒரு நிலையம்.

99. நைமிசாரண்யம் - தேவராசன். வட இந்திய இருப்புப் பாதையில் பலாமு-சிதாப்பூரிலுள்ள ஒரு நிலையம்.

100. சாளக்கிராமம் - மூர்த்திப்பெருமாள். நேபாள தேசத்தில் அம்லக்கஞ்ச் நிலையத்தில் இருந்து 110 மைல்.

101. பதரிகாச்சிரமம் - பதரிநாராயணர். அரித்துவாரத்திலிருந்து 173 மைல்.

102. திருக்கண்டங்கடிநகர் (தேவப்பிரயாகை) - நீலமேகப்பெருமாள், புருடோத்தமன். அரித்துவாரத்திலிருந்து பதரிகாசிரமத்திற்குச் செல்லும் வழியில் 58வது கல்லில் உள்ளது.

103. திருப்பிரிதி (நந்தப் பிரயாகை)-பரமபுருடன், பரிமளவல்லிநாச்சியார். அரித்துவாரத்திலிருந்து 155வது கல்.

104. துவாரகை (துவரை) - கல்யாணநாராயணர். பம்பாயிலிருந்து ஜாம் நகர் செல்லும் வழியிலுள்ளது.

105. வடமதுரை (கோவர்த்தனம்) — கோவர்த்தனேசன், சத்தியபாமை. மத்திய இருப்புப் பாதையில் மதுரா சந்திப்பிலிருந்து இரண்டு கல்.

106. திருஆய்ப்பாடி (கோகுலம்) - நவமோகன கிருஷ்ணர். உருக்குமிணிப்பிராட்டி, சத்தியபாமை நாச்சியார். மத்திய இருப்புப் பாதையில் மதுரா சந்திப்பிலிருந்து இறங்கிச் செல்ல வேண்டும்.

107. திருப்பாற்கடல்.

108. வைகுந்தம் (பரமபதம்).

} இவைகள் இரண்டும் இவ்வுலகில் இல்லை.

—ஆசிரியர்.

# கம்ப ராமாயணம்

'சிலம்புச் செல்வர்'

திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்

[மேலவைத் தலைவர்]

(முற்றுடர்ச்சி)

வான்மீகியிலே புலால் உண்ணலும் கள் உண்ணலும் வெறுக்கப்படவில்லை. புலாற் பழக்கம் இராமனுக்கு உண்டு என்று வான்மீகி கூறுகின்றார். ''புலாலுண்டிருப்பாய்; மது அருந்தியிருப்பாய்'' என்று கூறிச் சீதையை இராமன் வெறுத்ததாக வான்மீகி கூறவில்லை.

புலாலுண்ணலையும், கள்ளுண்ணலையும் வெறுப்பது, தமிழினத்தாரின் தனிப் பண்புகளாகும். இந்த இடத்திலும் கம்பன் பழக்க வழக்கங்களிலே, இராமனையும் சீதையையும் தமிழர்களாக்கி விடுகின்றான் என்று சொல்லலாம்.

''பெண்மையும் பெருமையும் பிறப்பும் கற்பெனும்
திண்மையும் ஒழுக்கமும் தெளிவுஞ் சீர்மையும்
உண்மையும் நீயெனும் ஒருத்தி தோன்றலால்
வண்மையில் மன்னவன் புகழின் மாய்ந்ததால்''

என்று இராமன் கூற்றாகக் கம்பன் படைத்துள்ள செய்யுளிலே, 'கற்பெனும் திண்மையும் . . . நீ ஒருத்தி தோன்றலால். . . மாய்ந்ததால்' என்றுள்ள வாசகமானது, இராமன் சீதையின் கற்பிலும் ஐயம் கொண்டிருக்கக் கூடுமென்ற எண்ணத்தைத் தருகின்றது. இதுதான் உண்மையென்றால், 'புலாலுண்டிருப்பாய்; மது அருந்தியிருப்பாய்' என்னும் குற்றச்சாட்டுகளை இராமன் கூறியிருக்கத் தேவையில்லை. 'கற்பை இழந்திருப்பாய்' என்று வெளிப்படையாகவே அவன் சொல்லியிருக்கலாம். வான்மீகியில் கூட சீதையின் கற்பையே இராமன் சந்தேகித்ததாக வெளிப்படையாகக் கூறப்படவில்லை.

''நற்குணத்தில் பிறந்தவனும், பெருமையடைந்தவனுமாகிய எவன்தான் பிறன் மனையில் வசித்த தன் மனையாட்டியைத் திரும்பவும் அன்பு கனிந்த மனத்துடன் அங்கீகரிப்பான்?

''பெருமை வாய்ந்த நற்குலத்தில் பிறந்து, பெருமை பாராட்டிக் கொள்ளும் நான், இராவணனுடைய பாவத்தால் இகழ்ச்சியடைந்தவளும், அவனுடைய தீய கண்களால் காணப் பெற்றவளுமான, உன்னைத் திரும்பவும் எங்ஙனம் ஏற்றுக் கொள்வேன்?''

என்பதுதான் வான்மீகியிலே சீதையை வெறுத்து இராமன் கூறும் வாசகம். இதிலே, சீதையினுடைய கற்பு இராமனால் சந்தேகிக்கப்படுகிறது என்று சொல்வதற்கில்லை.

கம்ப இராமாயணத்திலுள்ள மற்றொரு சுவையான செய்தி, தமிழ் நாட்டில் மட்டுமே தொன்று தொட்டு வழக்கத்திலிருந்து வரும் ஒப்பாரிக் கலையைக் கம்பர் சீதை மேலேற்றிச் சிறப்பித்திருப்பதாகும்.

கம்பராமாயணத்திலே காப்பியத் தலைவியான சீதை, பண்ணோடு இணைந்து பாடி அழுகிறாள். எப்போது? தந்தை தயரதனால் அளிக்கப்பட்ட மணி முடியை மாற்றாந் தாயான கைகேயி தன் மகனுக்காகப் பறித்துக் கொண்டு விட்டாள் என்ற செய்தியைக் கேட்டாளே, அப்போது அழவில்லை! ஆம்; அவள் சாதாரணப் பெண்ணாக இருந்திருந்தால், அரசனுடைய மனைவி என்ற அந்தஸ்து பறி போனதற்காகக் கதறி அழுதிருப்பாள். அவள், மண்ணக மாந்தர்க்கு அணியான பெண்ணரசியானதால், அரச வாழ்வு பறிபோனதற்காக அழவில்லை. ''இராமனுடைய மனைவி'' என்ற அந்தஸ்தை விடவும் பெரியதாக ''அரசனுடைய மனைவி'' என்னும் அந்தஸ்தை அவள் கருதவில்லை.

தன் கணவனான இராமன் வனம் புகப் போகிறான் என்ற செய்தியைக் கேட்டாளே, அப்போது அழுதாளா? அப்போதும் அழவில்லை. மாறாக, கணவனைப் பின்பற்றி வனம் செல்லவே விரும்பினாள். கணவனும் அதற்கிணங்கி அழைத்துச் சென்றான். அதனால் அப்போதும் அழுவதற்கு அவளுக்கு வாய்ப்பில்லை. அயோத்தியை விட்டுப் பிரிந்த பின்னர், கங்கை யாற்றின் வடகரையில் தங்கியிருந்தபோது, தயரதன் இறந்து விட்ட செய்தியைப் பரதன் மூலம் அறிந்தாளே, அப்போதுதான் சீதை அழுதாள். காப்பியத்திலே அதுதான் அவளுடைய முதல் அழுகை—கன்னி அழுகை!

பின்னர், விராதன் தன்னைத் தூக்கிச் சென்றானே, அப்போது இரண்டாவது முறையாக அவள் அழுதாள். அதன் பின்னர், இலங்கை வேந்தன் இராவணன் தன்னைத்தூக்கிச் சென்றபோது திரும்பவும் அழுதாள். அதன் பின் பத்து மாத காலம் அழுத வண்ணமாகவே இருந்தாள். தந்தையின் மரணச் செய்தியைப் பரதன் கூறக் கேட்டதும், இராமன் அழுவதனைப் பல செய்யுள்கள் பாடிக் கம்பர் காட்சிப் படுத்துகின்றார். அதுபோல, தன் மாமனுருக்காகச் சீதையழுததை, என்னவெல்லாம்

சொல்லியழுதாள் என்பதை, அந்த மகாகவி காட்சிப்படுத்தவில்லை. 'சீதை அழுதாள்' என்ற செய்தியை மட்டுமே, நமக்குத் தருகின்றார். 'பன்னி ஏங்கினள்' என்றதால், பல பலசொல்லி நெடு நேரம் அழுதாள் என்பது மட்டும் புலனாகிறது.

இறந்தவருக்காக இருப்பவர் ஏங்கி அழுவது இயற்கை. இது மனித குலம் முழுவதற்கும் பொதுவான வழக்கம். ஆனால் பண்ணிசைத்துப் பாடி அழுவது தமிழினத்தாருக்கே— அவர்களிலும் பெண் குலத்தாருக்கே உரிய தனி வழக்கமாகும். எழுதப் படிக்கத் தெரியாத பாமரப் பெண்கூடக் கேள்வி ஞானத்தைக் கொண்டு பாடியழுவது தமிழ் நாட்டில் வழக்கம். இது ஒரு கலையாகவே வளர்ந்து வந்திருக்கிறது. தமிழ்ப் பெண்களுக்கேயுரிய இந்த அரிய கலையானது, நவீன நாகரிக மோகம் காரணமாகத் தற்போது மறைந்து கொண்டே வருகிறது. பாடியழுவதை உயர்கல்வி கற்ற பெண்கள் அநாகரிகமாகக் கருதும் 'நவீன நாகரிகம்' பிறந்துவிட்டது!

கம்பரோ, இந்த ஒப்பாரிக் கலை, தமிழ்ப் பெண் குலத்தார் வழிவழியாகக் காப்பாற்றி வரவேண்டிய ஒன்று என்று கருதினார். அதனால், மாமனாரின் மறைவுக்காக இரங்கி யழுத சீதையானவள், பண்ணோடு கலந்து ஒப்பாரி பாடியழுதாள் என்கிறார். இது, 'வான்மீகி'யில் இல்லாத செய்தி.

இந்தியாவில்—குமரி முதல் இமயம் வரை பரந்து கிடக்கும் பாரதப் பெரு நாட்டில்—மக்களிடையே கலாசார ரீதியிலான ஒருமைப்பாடு உண்டு. அதுபோல, சில பல விஷயங்களில் அடிப்படையான வேறுபாடும் உண்டு. அந்த வேறுபாடுகளிலே ஒன்று, தமிழ் நாட்டுப் பெண்களிடையே பல்லாயிரம் ஆண்டுகளாக நிலைத்திருக்கும் ஒப்பாரிக் கலை. இது சிறிய விஷயந்தான் என்றாலும், தமிழினப் பெண்களுக்குப் பெருமை தருவது ஆதலால், தமிழகத்தில் உலவுகின்ற வடபுலத்துப் பெண் கூட ஒப்பாரி பாடியழும் வழக்கத்தைக் கடைப்பிடித்தாக வேண்டுமென்று கம்பர் கருதினார். அதனாற்றான், மிதிலையிலே பிறந்து, அயோத்தியிலே வாழ்ந்து, வினை வசத்தால் தெற்கு நோக்கிப் 'பாத யாத்திரை' புறப்பட்ட சீதையும், ஒப்பாரி பாடியழுதாள் என்பதாகக் கற்பித்துக் கூறுகிறார்.

சிலப்பதிகாரத்திலே கோவலன் வெட்டுண்ட செய்தியைக் கேட்ட கண்ணகியானவள் ஒப்பாரி பாடியழுகிறாள். அப்போது எழும் அவளுடைய அழுகுரலிலே ஒப்பாரிச் சந்தத்தை இளங்கோவடிகள் தந்திருக்கிறார்.

தென் பாரதத்தை நோக்கி நடை போடத் தொடங்கி விட்ட சீதா தேவியும், கண்ணகி தேவியையே பின்பற்றி மாமனாருக்காக மனம் கனிந்து ஒப்பாரி பாடியழுகிறாள். சீதை அழுதாள் என்ற தகவலைத் தருகின்ற இடத்திலே,

''மண்ணெனும் செவிலிமேல் வைத்த கையினள்
பண்ணெனும் கிளவியால் பன்னி ஏங்கினள்''

என்கிறார் கம்பர்.

இந்த வரிகளில் எத்தனையோ பொருள்களைக் கம்பர் புதைத்து வைத்திருக்கிறார். ''மண்ணெனும் செவிலிமேல் வைத்த கையினள்'' என்பதற்குப் பொருள் என்ன?

இழவுச் செய்தி கேட்டால், எந்த ஒரு பெண்ணும் தனித்திருந்து அழமாட்டாள். இன்னொரு பெண்ணைத் தழுவியழுவதற்கே விரும்புவாள். அந்த நிலையில் அவளைத் தழுவிக் கொண்டு அழுது, அவளுடைய துக்கத்திலே பங்கு பெற முன் வருவதும், தமிழ் நாட்டுப் பெண்களின் வழக்கம். ஆனால், கங்கைக் கரையிலே சீதை கட்டியழுவதற்குப் பெண் துணையில்லை. மாமியர் மூவரும் பரதனோடு வந்திருக்கிறார்கள் என்றாலும், இன்னமும் அவர்கள் படகை விட்டு இறங்கி வந்து சீதையைச் சந்திக்கவில்லை. ஆதலால், கட்டியழுவதற்குப் பெண் துணையின்றிச் சீதை தனித்திருக்கிறாள்.

இந்தச் சங்கடத்தைத் தவிர்க்க நிலமகளைத் தழுவி அழும்படி கம்பர் சீதைக்கு ''ஆணை''யிடுகின்றார். சீதைக்கு நேர்ந்த துக்கத்திலே பங்கு கொள்ள மண்மகள் கடமைப்பட்டவளா? 'ஆம்' என்றால், அவளுக்கும் சீதைக்கும் என்ன உறவு? —என்ற வினாக்கள் எழும் அல்லவா!

சீதை பூமியிலிருந்து கண்டெடுக்கப்பட்டவள் என்றொரு கதை உண்டு. ஆம்; திருமகளின் அவதாரமாகத் தோன்றிய சீதையைப் பூமி தேவியானவள் பாதுகாத்துச் சனக மகாராசனிடம் கொடுத்தாள் என்றொரு கதை உண்டு. அதை நினைவில் கொண்டே மண் மகளானவள் தன்னை வளர்த்த செவிலித் தாய் என்ற உறவு காரணமாக, அவளைத் தழுவிக் கொண்டு சீதை அழுகின்றாள் என்று கம்பர் கூறுகின்றார்.

சீதையானவள் மண்மகளைத் தழுவியழும் காட்சியைத் தாம் கண்டவர் போலக் கருதிக் கொண்டு, நமக்கும் காட்ட விரும்புகிறார். இங்கு, காவியப் புலவரான கம்பர் ஓவியக் கலைஞராகவும் மாறி,—''மண்ணெனும் செவிலிமேல் வைத்த கையினள்'' என்ற வரிகளின் மூலம், சீதையானவள் நிலமகளைத் தழுவியழுத காட்சியை ஓவியம் வரைந்து காட்டுகின்றார்.

மண்மகளை மன்னனுடைய மனைவி என்பர் கவிஞர் பெருமக்கள். ஆம்; தான் ஆளுகின்ற நிலத்தின் மீது அரசனுக்கு ஆதிக்கம் இருப்பதால், அரசனுக்கும் நிலத்திற்குமுள்ள உறவைக் கணவன்—மனைவி உறவாகக் கூறுவது கவிஞர் மரபாகி விட்டது.

இராமனுக்கு முடி சூட்டி விட்டு, தான் வானப்பிரஸ்த நிலையை மேற்கொள்ள இருப்பது பற்றித் தன் மந்திராலோசனைச் சபைக்குத் தயரதன் அறிவிக்குமிடத்தில்,

''பெருமகன் என்வயிற் பிறக்க, சீதையாம்
திருமகள் மணவினை தெரியக் கண்டயான்,
அருமகன் நிறை குணத்து அவனி மாதுஎனும்
ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்''

என்று கூறியதாகக் கம்பர் பாடுகின்றார்.

இதிலே, திருமகளின் அவதாரமான சீதையை இராமன் மணந்ததனைத் தாம் கண்டு களித்ததுபோல, ''கோசல நாடு'' எனும் மண் மகளையும் இராமனுக்கு மணமுடித்து வைத்துப் காணப் போவதாகத் தயரதன் கூறுகின்றான். இப்படி, மண்ணுளும் மன்னனுக்கு மண்மகளை மனைவியாகக் கற்பித்துக் கூறும் இலக்கிய மரபுப் படி, சீதையும், கணவனுன தயரதனை இழந்த மனைவியாகிய மண்மகளைத் தழுவியழுது, அவளு டைய துக்கத்தில் பங்கு கொள்கிறாள் என்பதைத் தெரிவிக்கவும், ''மண்ணெனும் செவிலிமேல் வைத்த கையினள்'' என்று கம்பர் கூறியிருப்ப தாகக் கொள்ளலாம்.

ஒரு இனமானது தன்னுடைய பாரம்பர்யப் பெருமைகளை, அஃதாவது பழக்க வழக்கங்களைக் காத்து வருவதன் மூலந்தான், மனித சமுதா யத்தின் முன்னர் அது தலைநிமிர்ந்து நிற்க முடியும் என்பது, கம்பருடைய கொள்கையா கும். இந்தக் கொள்கையைத் தமிழ்ப் பெண்க ளுடைய பழக்க வழக்கங்களிலே மிகவும் சாதா ரணமானதாகிய ஒப்பாரிக் கலையை, வடபுலத்து மகளாகிய சீதையின் மேல் ஏற்றிக் கூறுவதன் மூலமும் தமிழினத்தாருக்குப் புலப்படுத்துகிறார் எனலாம்.

இராமாயணத்தைப் படிக்கும் தமிழருக்கு அயல் இனத்தவரைப் பாத்திரங்களாகக் கொண்ட ஒரு காப்பியத்தைத்தான் படிக்கி ரோம் என்ற நினைப்பு வராமலே செய்து விடு கிறார்—அதாவது, இராமாயண காப்பியத் தலை வனையும் தலைவியையும், தம்மவராகவே தமிழர் கருதும்படி கம்பர் செய்து விடுகிறார்.

கம்பனிலே உலாவியற் படலமானது, தத் துவத்திலே அந்த மகா கவிக்கு இருந்த ஞானத் திற்கு மிகச் சிறந்த எடுத்துக் காட்டாகும். தத்துவக் கண்கொண்டு பார்த்தாலொழிய அவ னுடைய சிறப்பை அறிய முடியாது. பொது வாகக் காப்பிய நாயகனுன இராமனைத் தயரத சக்கரவர்த்தியின் மைந்தனுகவும், சீதாப் பிராட் டியின் கணவனுகவும், கோசல நாட்டுக் குடி மக்கள் விரும்பும் இளவரசனுகவும், அரக்கர் களை மாய்க்கும் வீரனுகவும், கம்பர் தம் காப்பி யம் முழுவதிலும் காட்டுகின்றார். ஆயினும், அவனைத் திருமாலின் அவதாரமாகவும் கொண்டு தான் கதையை நடத்துகின்றார் என்பதனை மறந்து விடுவதற்கில்லை.

மகா பாரதத்திலே, தான் திருமாலின் அவதாரம் என்பதனைக் கண்ணன் பல்வேறு சந்தர்ப்பங்களில் பாண்டவருக்கும் கௌரவருக் கும் உணர்த்தி வைக்கின்றான். இதற்கு மாருக, கண்ணனை மரியாதைக்குரிய உயர்குணமுள்ள மனிதனுக ஏற்கவும் கௌரவர்களும் ஜராசந்த னும் மறுக்கின்றனர்.

இராமாயணத்திலே இராமனுடைய நிலைமை இதற்கு நேர்மாருனது. வான்மீகியுஞ் சரி, கம்பருஞ் சரி; தான் திருமாலின் அவதாரம் என்பதை இராமன் உணர்ந்திருந்ததாகக் கூற வில்லை. ஆனல், இராமனைத் தவிர ஏனையோ ரெல்லாம் அவனைத் திருமாலின் அவதாரமாக —ஏன்? திருமாலாகவே கருதினர் என்பதனைக் காப்பியத்தின் பல்வேறு இடங்களில் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். வில்லனுக வரும் இரா வணன் கூட, இதற்கு விலக்கன்று. ஆம் ; கதையின் இறுதியிலே இராமன் திருமாலின் அவதாரம் என்பதனை இராவணன் மாலிய வானிடம் கூறுகின்றானல்லவா?

கம்பனின் இராமாயணத்திலே உலாவியற் படலம் என்பதாகப் பால காண்டத்தில் ஒரு படலம் இருக்கிறது. அதிலே மிதிலைப் பட்டி னத்தின் வீதி வழியே செல்லும் இராமனை அந் நகரத்துப் பெண்களெல்லாம் கண்டு காமுறுவ தாகக் கூறப்படுகிறது. இந்தப் படலத்தில் கம்பருடைய வருணனையானது, பெண்களுக்கே உரிய ஒழுக்க நெறிகளிலிருந்தும் பிறழ்ந்து செல் கிறது என்பது சிலருடைய கருத்தாகும். கண்ட னங்களும் எழுந்தது உண்டு. இவர்கள், உலா வியற் படலத்திலே இராமனைச் சக்கரவர்த்தித் திருமகனுக அன்றி, திருமாலாகவே கம்பர் காட்டுகின்றார் என்பதனை ஆராய்ந்தறிவதில்லை.

பரமான்வாவைப் பதியாகவும், ஜீவான் மாவைப் பசுவாகவும், தத்துவ ஞானியர் கூறு கின்றனர். பரமான்மாவை ஆணுகவும், ஜீவான் மாவைப் பெண்ணுகவும் கற்பித்துக் கூறும் இலக்கிய மரபும் உண்டு. பக்குவப்பட்ட ஜீவான் மாவைப் பரமான்மா ஆட்கொள்ளும்போது ஜீவான்மாவானது நிர்வாணம் அடைகின்றன. ''நிர்வாணம்'' என்பது, ''யான்'' —''எனது'' என்னும் பற்றுக்களிலிருந்து ஆன்மா விடுபடுவ தாகும். இதனை,

''யான் எனது என்னுஞ் செருக்கறுப்பான்
வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்''

என்னும் குறளிலே வள்ளுவரும் உணர்த்துகின் றார். கம்பர் காலத்திற்கு முன்பே இந்தப் பரமான்மா ஜீவான்மா ஐக்கியம் பற்றிய தத் துவம், தமிழ் இலக்கியங்களில் ஏறி, தமிழ் ஞானியர் சிலருடைய வரலாருகவும் அமைந்து விட்டது. கம்பனில் உலாக் காட்சி புகுந்ததும் இந்த வகையில்தான்.

மிதிலை நகர வீதிகளிலே இராமன் உலாப் போகிறான். வீடுகளிலுள்ள பெண்களெல்லாம் அவனைக் கண்டு காமுறுகின்றனர். அந்த நிலை யிலே அவர்களில் சிலர் ஆடை நெகிழ்வது, கை வளையல்கள் கழன்று விழுவது போன்ற அவத் தைகளுக்கும் உள்ளாகின்றனர் என்பது கம்ப ரின் வருணனை. இது, பக்குவப்பட்ட ஜீவான் மாக்களின் ''நிர்வாண'' நிலையைக் குறிக்கும் நிகழ்ச்சிகளாகும்.

இந்த இடத்திலே இராமனைப் பரமான்மாவாகவும், அவனைக் கண்டு காமுறும் மிதிலை நகரத்துப் பெண்களைப் பக்குவப்பட்ட ஜீவான்மாக்களாகவும் கற்பித்துக் கொண்டுதான் கம்பர் பாடுகின்றார்.

உலாவியற் படலத்திலுள்ள பாடல்களில் மிகப் பெரும்பாலானவற்றில் இந்த உண்மை புலப்படவில்லை. ஆம்; இலக்கியச் சுவை கருதிக் கம்பர் இதைப் புலப்படுத்தவில்லை. படலத்தின் இறுதியிலுள்ள செய்யுள்களில்தான் புலப்படுத்துகிறார்.

மிதிலை நகர வீதிகளின் வழியே உலாப் போகும் இராமன் தன் பார்வையில் படும் பெண்களைக் காதலிக்கவில்லை. மிதிலை நகரத்துப் பெண்கள்தான் அவனைக் காதலிக்கின்றனர்' இது, அகத்திணை இலக்கணப்படி கைக்கிளை — அதாவது, ஒருதலைக் காமம். என்றாலும், வீதி வழியே போகும் அயலான் ஒருவனை நகரத்துப் பெண்களெல்லாம் காதலிக்கிறார்கள் என்று சொல்வது அவர்களுடைய ஒழுக்கத்தைக் குறிப்பதாகாது. மாறாக, உலாப் போகும் இராமனைப் பரமான்மாவாகவும், அவனைக் காதலிக்கின்ற பெண்களை ஜீவான்மாக்களாகவும் கற்பித்துக் கொண்டுதான் கம்பர் உலாவியற் படலத்தைப் பாடியிருக்கிறார் என்று கொண்டால் பெண்ணினத்தின் பெருமைக்குக் குறைவு நேராது.

உலாப் போகும் இராமனைக் கண்டு காமுற்ற பெண்களின் நிலையைப் பொதுவாக வருணிக்குமிடத்து,

> ''தோள்கண்டார் தோளே கண்டார்,
> தொடுகழல் கமல மன்ன
> தாள்கண்டார் தாளே கண்டார்
> தடக்கைகண்டாரும் அஃதே
> வாள்கொண்ட கண்ணார் யாரே
> வடிவினை முடியக் கண்டார்?
> ஊழ்கொண்ட சமயத் தன்னான்
> உருவுகண் டாரை ஒத்தார்''

என்று கம்பர் பாடுகின்றார்.

இந்தப் பாடலிலே, ''தோள் கண்டார் தோளே கண்டார்'' என்றும், 'தாள் கண்டார் தாளே கண்டார்'' என்றும், ''தடக் கை கண்டாரும் அஃதே'' என்றும் கம்பர் கூறுவதால், இராமனுடைய தாள் கண்டார் உடலின் பிற பாகங்களைக் காணாமல் அந்தத் தாளிலேயே கண்ணையும் கருத்தையும் பொருத்தினர் என்பது புலனாகின்றது. தோள் கண்டவர், கை கண்டவர் நிலையும் இதுவாகத்தான் இருந்தது என்கிறார். வாள் போன்ற கண்ணுடைய பெண்களில் எவருமே இராமனுடைய வடிவினைமுடியக் காணவில்லை யென்றும் கூறுகின்றார்.

பார்வையிலே இமையா நாட்டம் என்பதாக ஒன்று உண்டு. பக்தியோடு பரம்பொருளின் உருவத்தைப் பார்க்கும்போதுதான் இமையா நாட்டம் ஏற்படும். இதனை, ''கண்இமைத்துக் காண்பார்தம் கண் என்ன கண்ணே!'' என்று சிலப்பதிகாரத்துள் ஆய்ச்சியர் குரவையில் இளங்கோவடிகள் கூறுவதாலும் அறிகின்றோம்.

காதலனைக் காண்பது வேறு ; கடவுள் வடிவத்தைக் காண்பது வேறு. காமத்தால் காதலனைப் பார்ப்போர் முதலில் முகத்தையே பார்ப்பார்கள். இதனை,

> ''கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்
> சொற்கள்
> என்ன பயனும் இல''

என்னும் குறட் பாவாலும் அறிகிறோம். மிதிலைப் பதியிலே இராமன் வீதியுலாப் போகுங்கால், கன்னிகா மாடத்திலிருந்த சீதையைக் காண்கிறான். சீதையும் இராமனைக் காண்கின்றாள். இந்தக் காட்சியிலே, இருவருடைய கண்களும் ஒன்றையொன்று உண்டு விடுகின்றன ; இதயங்கள் மாறிப் புகுகின்றன என்று கம்பர் வருணிக்கின்றார்.

''அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்'' என்று கூறுவதால் இது ஒருதலைக் காமம் அல்ல; இரு மனங்களும் ஒரு மனமாகி விட்ட காதல் என்பதனை உணர முடிகிறது.

திருப்பாற் கடலில் திருமாலும் இலக்குமியுமாக இருந்தவர்களே, அயோத்தியில் இராமனும், மிதிலையில் சீதையுமாக அவதரித்தார்கள். இப்படி, ஒரு இடைக் காலத்தில் பிரிந்திருந்த திருமாலும் இலக்குமியும் திரும்பவும் மிதிலையிலே சந்திக்கிறார்கள். இதனை, ''பிரிந்தவர் கூடினால் பேசலாகுமோ?'' என்னும் வாக்கால் கம்பர் உணர்த்துகின்றார். சீதையும் இராமனும் முதன் முதலாகச் சந்தித்தபோது, அவர்களுடைய நான்கு கண்களும் இரண்டு கண்களாக எண்ணிக்கையில் குறைந்து விடுமளவிற்கு ஒன்றி விடுகின்றன.

மிதிலைப் பெண்கள் இராமனைக் கண்ட காட்சியைக் கூறுமிடத்து, அவனது திரு முகத்தைக் கண்டதாகக் கூறவில்லை. மாறாக, திருவடியைக் கண்டு, அதிலேயே பார்வையைப் பதிய வைத்து விட்டதாகப் பாடுகின்றார். இதனாற்றான், உலாவியல் படலத்தில், இராமனைப் பரமான்மாவாகவும், மிதிலைப் பெண்களை ஜீவான்மாகவும் எண்ணித்தான் கம்பர் பாடுகின்றார் என்று கருத வேண்டியிருக்கிறது. இப்படிக் கருதினால் உலாவியல் படலத்திலுள்ள பாடல்களிலே காமரசம் கசிவதாக அல்லாமல், பக்தி ரசம் கசிவதாகச் சொல்லலாம்.



# அன்பும் சிவமும்





திரு. வித்துவான் சா. குருமூர்த்தி

இவ்வியனுலகம் வியக்கத்தக்க முன்னேற்றங்களைப் பெற்றுவிட்டது. மனிதர்களின் பெருக்கத்திற்கேற்ப, தேவைகளின் பெருக்கமும், அத்தேவைகளை எளிதில் பெறும் அறிவு வளர்ச்சியும் பெற்ற இன்றைய சமுதாயம் எங்கும் எதிலும் முன்னேற்றமென்ற நிலையை அடைந்திருக்கிறது.

ஆனால் இதற்கிடையில் சமுதாயத்தில் திருப்தி இன்மையும், ஏதோ ஓர் குறையும் மறைந்தே வளர்ந்து வருவதாகவும் நினைக்கும் நிலையும் உள்ளது. புறவியல் வளர்ச்சியில் மட்டுமே சமுதாயம் முன்னேறியுள்ளதோ? என நினைக்கத் தோன்றுகிறது. 'அக வளர்ச்சிக் குறையே அமைதி இன்மைக்குக் காரணம்' என்று சிந்தனையாளரின் சிந்தனை செல்கிறது. இயற்கையை வென்ற மனிதன் சிறிதேனும் தன் உள்ளத்தை வென்றானா? என்ற ஐயம் உறுதியாக உருப்பெற்று நிற்கிறது.

இது உண்மைதான். இவ்வினாவுக்குரிய விடையையும் அதைச் செயல்படுத்துவதற்குரிய தகுதியையும் பெற்றுவிட்டால் மக்களின் பல அல்லல்கள் அகலும். சமுதாயத்தின் இன்றைய பெரும் பிரச்னை இது ; தீர்க்கப் படவேண்டிய பெரும் பிரச்னை.

புறவியலில் வெற்றி கொண்ட மனிதன், அக வயலில் போற்றப்படும் வளர்ச்சி பெறாமை விருப்பதும் அவனைப் பற்றிய ஓர் சாபக்கேடு எனலாம். அணுவைப் பிளந்து அதன் ஆற்றலைக் கொண்டு விந்தை பல செய்யும் மனிதன், தன் மனவியல்பினைக் காணவோ, அதை மாற்றியமைக்கவோ இயலவில்லை. தன் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் வித்தை அவன்உணரவில்லை. புறவியலில் வளர்ச்சி, அகவியலில் தொய்வு ! இவ்வாறெல்லாம் சிந்தனையாளர் சிந்தனை செல்கிறது.

''மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' என்றும், ''மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாமின்பம்'' என்றும், ''உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'' என்றும் போற்றப்பட்ட இம்மானிடப் பிறவிக்கு மாயையின் பெருவலியால் அது ஆட்டுவிக்கப்பட்ட காரணத்தால், 'பிறவிப் பெருங்கடல்' என ஐயுறும் நிலை ஏற்பட்டுள்ளது. நம் முன்னோர் பேரின்ப நிலை பெற வேண்டி மனிதப் பிறவியையும் வேண்டினர். தூநெறி நின்று தூய்மை பெற்று நம்மவர் பலர் அந்தமில் இன்பத்து வீடுபேறும் இறையனுபவமும் பெறப் பல வழி முறைகளை வகுத்துச் சென்றனர். அவற்றில் புலனடக்க மென்பது முதல் நெறியாக உணர்த்தப்பட்டது. மனத்தினால் தான் மனத்தை அடக்கவியலும் என்றுணர்ந்து சான்றோர், 'மனத்தையடக்க மனந் துணையாகும்' என்று வழி காட்டினர்.

பாசத் தொடர்பால் பாழ்பட்ட மனித மனத்தை மேன்மையுறச் செய்ய வந்த சமய நெறிகளாகக் கருமம், ஞானம், பக்தி என்பவை வழிகாட்டலாயின. இம்மூந் நெறிகளில் யாவர்க்கும் எளியதும் ஏற்றதுமாகப் பக்தி நெறியே பெரு வழக்காயிற்று. சமயங்கள் யாவும் இப் பத்தி நெறி விளக்கங்களே. மாமுனிவர்களும், நாயன்மார்களும், ஆழ்வார்களும் இப் பத்தி வெள்ளத்தில் ஆன்மாக்களைத் திளைக்கச் செய்து அறப் பயிர்களை வளர்த்தனர். பத்தி மார்க்கம் வளர வளரக் கருத்துக்கள் பல சமயங்களாக உருவெடுத்தன. அகச் சமயம், அகப் புறச் சமயம், புறச் சமயம், புறப் புறச் சமயம் என்று சமயங்கள் நான்கு பெரும் பிரிவுகளாகவும், இருபத்துநான்கு உட்பிரிவுகளாகவும், மற்ற பல துணைப் பிரிவுகளாகவும் பிரிந்து வளர்ந்தன. ஒன்றேயாயிருக்கின்ற முதல்வன் அச்சமயங்கள் தோறும் அவரவர் கடவுளாயிருந்து அருள்வர்.

அகப்புறச் சமயத்தில் அமைந்த பெரு நெறி வழக்கில் வந்த அன்புக் கொள்கையே சைவமாயிற்று. எம் சமயக் கருத்துக்களையும் தன்னகத்தே கொண்டு, அவற்றுள் மாறுபடாமல் ஒத்த கருத்துடையதாக, ஆனால் தனக்கென ஓர் தனித் தன்மை கொண்டு தன்னியல்பு குன்றாது கருத்துக் கருவூலமாகத் திகழ்வதுசைவ சமயமாகும்.

'நினைப்பற நினைந்தேன் நீயலால் பிறிது மன்றின்மை' என்ற திருவாசகத்தின் கூற்றுப் படி, சிவனே வாக்கிறந்த பூரணமாய், முழுமுதற் கடவுளாக நின்று மக்கள் எத்தெய்வத்தை வழிபட்டாலும் அத்தெய்வமாக வந்தருள்வான்.

''யாதொரு தெய்வங் கண்டீர் அத்தெய்வமாகி
யாங்கே
மாதொருபாகனார் தாம் வருவர்''

என்று சிவஞான சித்தியார் பேசும்.

ஆன்மாக்களின் அறிவு, அறியாமை நீக்கிப் பேணும் சிவனைப் பற்றறுதவரைப் பற்றி,

''அறிவு அறியாமை இரண்டுமகற்றிச் செறிவா
யெங்குநின்றசிவனைப்
பிரிவறியாத பிரானென்று பேணும் குறியறியாதார்
கோணறியாதாரே''

என்று திருமூலர் பேசுவர்.

''எங்கும் அருளுடன் நிறைந்ததாய்யாதினும் வல்ல ஒரு சித்தாகிக் கங்குல் பகலற்றதாய் விளங்கும் ஓர் சத்தியே சிவம். சிவனொருவனே கடவுள். சிவனைத் தவிர வேறு ஒரு கடவுளுமில்லை.''

என்று உபநிடதங்கள் பேசும்.

ஒரு நாமம் ஓர் உருவமில்லாதவனுக்கு ஆயிரம் திருநாமம் கூறிச் சான்றோர் போற்றி வழிபட்டனர்.

எல்லாம் கடந்தும், எல்லாவற்றினுள்ளும் நின்றும், உருவருவாயும், ஐந்து பூதங்களாயும், அந்தக் கரணங்களாயும் விளங்கி எங்கும் வியாப்பிய சத்தியாகத் திகழும் சத்தி சிவ சத்தியே. அச்சிவத்துடன் ஒன்றுபட விழையும் ஆன்மாவின் குறிக்கோள் வெற்றி பெற அன்பு வழியே உதவும். சிவம் என்ற சொற்கு 'அன்பே சிவம்' என்றுணர்ந்து மகிழ்ந்த திருமூலர் உள்ளம், அன்பினை வணங்கி அத்துடன் இரண்டறக் கலப்பதும், சிவனை வணங்கி அத்துடன் இரண்டறக் கலப்பதும் ஒன்றே என்று கூறுவதைக் காணலாம். இந்த மேலாம் நிலையே, கூடும் ஆசையிற் கும்பிடலே அன்றி வேறு பயன் கருதா நிலையாம். இந்நிலை பெற்ற உள்ளத்தில் தோன்றுவதே பத்தியின் பெரு நிலை. இந்நிலை அடைந்தார்க்குப் பத்தி செய்யப் பெரும் பொருள் வேண்டாம்.

''புல்லிதழ் எருக்கமாயினும் உடையவை
கடவுள் பேணேம் மென்னு''

என்ற புறநானூற்றுத் தொடரும், ''யார்க்குமா மிறைவர்க்கொரு பச்சிலை'' என்ற திருமூலர் கூற்றும் இந்த நிலைமையை விளக்கும் தொடர்களே.

தண்மையைத் தன்னகத்தே சுமந்து தன் சுமையை ஏற்பவனை நாடித் தானே செல்லும் இறைமை என்ற மேகம் தூய்மையான இதயங்களிலிருந்து வரும் அன்புக் காற்று பட்டவுடன் பேரானந்தமான அருளைப் பொழிகிறது. கண்ணை அப்பிய தொண்டனுக்கருள ஓடிவந்த அவ்விறையருள் ''எற்றுக்கடிகேள் என் கண் கொண்டீர்! நீரே பழிப்பட்டீர்! திருவாரூரீர் வாழ்ந்து போதீரே'' என்று வன்மை பேசிய தொண்டனுக்காகவும் தூது போனது. சிவத்துடன் திளைத்த அனுபூதி மான்களின் உள்ளம் நாமார்க்கும் குடியல்லோம்' என்ற இன்பக் களிப்பில் துள்ளியது. அன்பினால் இறைவனைச் சிக்கெனப் பிடித்து அவனைத் தன் புறம் புறம் திரியச் செய்த பெருமையைத் தேடிக் கொண்டது நம் திருத்தொண்டர் கூட்டம். அவர்களால் உணரப்பட்டு, அவர்கட்குக் கை வந்த கலையாக இருப்பது அன்புக் கலை. இக்கலையைப் பயின்றோர்க்குப் புறநிலை விளக்கங்களைக் கொண்டு ஏதுக்களை முன் வைத்து இறைமையையாயும் இடர்ப்பாடு தேவையில்லை. ஆதலால்தான் 'ஏதுக்களாலும் எடுத்த மொழிகளாலும் மிக்குச் சோதிக்க வேண்டாம்' என்று சம்பந்தரின் அநுபவம் பேசுகிறது.

ஆனால் பின் தோன்றிய மெய்கண்டார் அவன், அவள், அது எனும் மூநிலையில் அறிவின் துணை கொண்டும் புறநிலைச் சார்பு கொண்டும் இறைமையை ஆய்ந்தார். அன்பை அடிப்படையாகக் கொண்ட பத்தி இயக்கமே பரசமய வளர்ச்சி மிகுந்த சம்பந்தர் காலத்தில் இயைபுடையதாக இருந்தது. ஆனால், வழிவழி வந்த நெறியில் கேள்விகளும் விவாதங்களும் மிகுந்த மெய்கண்டார் காலத்திலோ அறிவின் துணை கொண்ட தர்க்க முறையில் பத்தி வளர்ச்சியே ஏற்புடையதாயிற்று. இதனால் குறிக்கோளை மாற்றாமல் வழி முறைகளை மாற்றிக் கொள்வதில் நம் முன்னோர்கள் தயங்கியதில்லை என்பதை நாம் உணரலாம். எவ்வாறாயினும் பயன் கருதாப் பத்தி செய்வதே ஆன்ம ஈடேற்றத்திற்குகந்த வழி என நம் முன்னோர் உணரத் தவறவில்லை.

இப்பத்தி நெறி விளக்கங்களாகவே வேதங்களும் திருமுறைகளும் விளங்குகின்றன. இந்நிலையே இறைவனை எளிதில் கிட்ட வழியென உணரினும் பாசப் பிணிப்புற்ற மானிடர் யாவர்க்கு மெளிதாய் வரப்பெறுவதொன்றன்று. எடுத்த எடுப்பிலேயே ஒரு கண்ணப்பனாகவோ, சண்டீசனாகவோ அன்பு செய்து உய்யும் வாய்ப்பும் தகுதியும் யாவர்க்கும் கிட்டாது. பாசபந்தமுள்ள மனிதன் படிப்படியாகத்தான் முன்னேற முடியும்.

''நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து அன்பே
நெகிழ்ந்து
நெகிழ்ந்து ஊற்றெழும் கண்ணீரதனால் நனைந்து
நனைந்து''

என்று தாயுமானவர் உணர்த்தியவாறு படிப்படியாகத்தான் முன்னேற முடியும். அத்தகைய நிதானமான, எளிமையான வழியினைக் காட்டுவதே சைவ நெறி.

மரபுப் பழக்கம், ஓரளவு அச்சம் இவற்றின் அடிப்படையில் பத்தி வளர்ச்சியின் முதற்படியில் கால் வைக்கும் மனிதன் பக்குவம் வளர வளரப் பத்தி வயப்பட்டு இறைமையை நாடத் துவங்கி, ஆராதனைகள் திருவிழாக்கள் போன்றவற்றில் மனம் இலயிக்கப் பெற்று, இவ்வாறு புறச் செயல்களால் ஈர்க்கப் பட்டபின் சிந்தனை வளர அன்பு வழி கொண்டு, அவ்வன்பே இறை பற்றுகப் பரிணமிக்கப் பண்பட்டுச் சிவத்துடன் கலக்கின்ற நிலையே துரிய நிலை எனப்படும். இந்த அன்புவழி பத்திநெறி விளக்கங்களையே இன்றைய சமுதாயம் செவி சாய்த்து ஏற்கக் காத்திருக்கின்றது. இந் நெறியில் நல் வழி காட்டியாக விளங்குவதே இன்றைய சமயத் தொண்டர்களின் சமுதாயத் தொண்டெனில் அது மிகையாகாது.

# திடமலியும் வடபழநி இடங்கொண்ட வேலனே!

*'வித்யாரத்தின, கலைமாமணி'*
தவத்திரு. சுத்தசத்வானந்தர், திருமயிலை.

சரவண பவவென்னும் சடாட்சரத்துள் இயங்கிடும்
சண்முகத் தெய்வ வடிவே!
தவயோகி யர்நெஞ்சத் தாமரையில் ஓங்கிடும்
தத்துவ ஞான குருவே!
கரணசுத்தி கொண்டோரின் கருத்தாகப் பூக்குமொரு
கற்பனை கடந்த சுடரே!
கனவிலும் மறவாதுன் கழலிணை துதிப்போரைக்
காத்திடும் கருணைக் கடலே!
பரங்கனியாய் இனிக்குமொரு பரசுகத்தை நல்கு
மொரு
பண்டித மோன முதலே!
பாட்டினுக் கிரங்கிவினைக் கேட்டினை நீக்கியருட்
பதியினைக் காட்டும் கனலே!
சிரங்குவித் துனைப்போற்றிக் கரங்குவித் தெந்நாளும்
சேவிப்போர்க் கெளிய பொருளே!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே! *(1)*

ஓங்கார ப்ரணவத்திற் பாங்காகச் சொலிக்கின்ற
ஒப்பிலா மாமுரு கனே!
ஒலியடங்கு நிலையிலே ஒளிபொங்கு வடிவிலே
ஓங்கிநின் றருளும் குகனே!
ஆங்காரப் பகைவீழ்த்திச் சிங்காத னத்திருக்கும்
அம்மையின் அருமை மகனே!
ஆசாபா சங்கொன்றோர் நேசத்து டன்என்றும்
அநுபூதி பெறச்செய் பவனே!
ஏங்காத வீட்டிலே தூங்காத நாட்டிலே
என்றும்யான் இருக்க அருள்வாய்!
எண்ணுத எண்ணங்கள் நண்ணுமல் மாற்றியே
எழிற்பதங் காட்டி யருள்வாய்!
தீங்கான வினைவெல்லும் திருச்சத்தி வேல்தாங்கும்
தெய்வச்சண் முகனே! பரனே!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே! *(2)*

ஆகம புராணங்கள் யோகநன் மார்க்கங்கள்
ஆராய்வு நூல்கள் யாவும்
அளவின்றிக் கற்றாலும் அருளுணர்வு தோன்றுமோ?
அறுமுக தேசி கனே!
வேகந்தான் அற்றாலே ஏகமாய் உன்னேடே
வேறின்றி இருக்க லாமே!
வெய்யவினை வஞ்சமறத் துய்யஉன் பதங்காணும்
மேன்மையும் தான்வருமே!
பாகென உருகுமனப் பத்மமிசை வீற்றிருக்கும்
பாலதண் டாயு தனே!
பாலினல் நீராட்டும் சீலருக்கு தவிசெய்யும்
பரிவுள்ள தெய்வ குகனே!
சேகரன் றனக்கினிய சீர்மோனச் செல்வனே!
சிவஞானப் பழமும் நீயே!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே! *(3)*

புறம்பேசும் அற்பரைஓர் போதும்க ருதிடாமல்,
பொய்யரை யணுகி டாமல்,
பொருள்வேண்டி வழிதவறும் மருளுற்ற கயவரைஎப்
போதும்நெஞ் சிற்கொள் ளாமல்,
அறமற்ற மனமற்ற மறமுற்ற சினமுற்ற
அறிவீனர் தமைக் கூடாமல்,
அழிவுக்கு விதைதேடும் ஆணவத் தோர்தம்மை
அண்டியே நின்றிடாமல்,
முறையேது மில்லாது குறையோதும்தீயோரின்
முகத்தினைக் கண்டி டாமல்
முத்தியினைத் தரும் உன்னைப் பத்திசெய் திருக்கின்ற
முதன்மையைத் தந்தா ளுவாய்!
திறமான துறவுற்ற தெளிவுற்ற முதல்வனே!
செழுஞ்சுட ரான வனே!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே'. *(4)*

ஆதாரம் இருமூன்றும் அமைந்தநிலை காட்டவே
அழகாக நிற்கும் இறையே!
அஞ்சலெனும் நிலைகாட்ட அபயபத வேல்காட்டும்
அருங்குணக் கிருபா நிதியே!
பாதார விந்தமதைப் பத்திசெயும் அடியாரைப்
பரிவாக அணைக்கும் மதியே!
பந்தமதை விடுத்துன்னைச் சொந்தமென அடுப்போர்க்குப்
பரகதி நல்கு பதியே!
சேதார மில்லாது செய்தநகை போல்மின்னும்
செம்மைசேர் ஞான ஒளியே!
சித்தமாம் பொய்கையில் நித்தமும் எழிலோடு
சீர்தரப் பூக்கும் மலரே!
தீதான வினைபேர்த்துத் தீராத இடர்தீர்த்துத்
தெய்வநிலை சேர்க்கும் அறிவே!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே! (5)

சாகரங் கடந்திடநின் சடாட்சரநன் மந்த்ரமதைத்
தக்கதுணை யாகக் கொள்வேன்!
சரவண பவவென்று சதாகாலம் சிந்தித்துத்
தவநிலைத் தியானத் தாழ்வேன்!
போகபோக் கியம்விட்டோர் போற்றும்நின் தாள்மலரைப்
போற்றியே நாளும் உய்வேன்!
பொல்லாத பகைத்தொல்லை நில்லாது பண்ணும்நின்
பொன்வேலைப் போற்றி செய்வேன்!
ஏகமே நீயென்ற யோகத்தில் ஆழ்ந்தென்றும்
இன்பமேல் நிலையில் நிற்பேன்!
எட்டாத பேரின்பம் தட்டாது கிட்டவே
என்றும்நின் கலையைக் கற்பேன்!
தேகத்தை நம்பாது தெய்வம்உனை நம்பியே
தெளிந்தசிற் சுகத்தி ருப்பேன்!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே!. (6)

அறுகோணச் சக்ரமுறும் நறுமாம லர்ச்சுடரே!
அச்சக்ர நடுசேர் ஒளியே!
அவமான பொழுதெலாம் தவமான பொழுதாக்கும்
அன்பரை யாளும் அரசே!
பொறுமையே பூணுசிவ போகப்பெ ருங்கனியாய்ப்
புந்தியில் இனிக்கும் அமுதே!
புயல்வாழ்வு நேராது பொன்னான வாழ்வுதரு
புண்ணிய மாமூர்த் தியே!
வறுமையாம் ஒருபாவி வாட்டாது காக்கின்ற
வள்ளலாய் இலகும் முருகே!
வஞ்சர்க்குக் கொஞ்சமும்தன் வடிவத்தைக் காட்டாத
வல்லவேல் பிடித்த தேவே!
சிறுமையே சேராது சிந்தைவைத் தணைக்கின்ற
செழுங்கரு ணைத்தெய்வமே!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே உமைபா லனே! (7)

தான்செய்வ தாய்எண்ணும் 'நான்'உற்றோர் ஓ போதும்
தலைவனே, உன்னை யறியார்!
தஞ்சம்நீ யெனக்கெஞ்சும் நெஞ்சினர்கள் உன்தாளைத்
தயைபெற என்றும் காண்பார்!
தான்கெட்டு நின்றவர்கள் வான்பொருள்உன் னையென்றும்
தண்ணொளி யாக உணர்வார்!
சரவண பவவென்னும் பரமந்த்ர ஆறெழுத்தில்
சகலமும் தோன்றத் தெளிவார்!
ஊன்புகுந்த ருளமுதத் தேன்பாய்ச்சும் கருணைநிதி
உனையறிந் தவர்கள் வாழ்வார்!
உத்தமத் தத்துவத்திற் சித்தம்ப திந்திருப்போர்
ஓம்அதில் உன்னைக் காண்பார்!
தேன்பொங்கும் உன்னடியின் ஆனந்த நிலைதந்து
சித்தனாய் எனையாக் குவாய்!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே! (8)

தீராஉ டல்நோயும் தீயதோர் மனநோயும்
திண்பவ நோயும் தீரத்,
திண்டாடு நிலையற்றுக் கொண்டாடு நிலைபெற்றுச்
சிவஞான சித்தி சேர
ஆராஅ ருள்செய்யும் அற்புதத் தனிமருந்தே!
அகண்டஓர் சுகவி ருந்தே!
அருந்தியான நிட்டையொடு பெருந்துறவு பூண்டுமே
அறிவாகப் பொங்கு கடலே!
வேரான வினைவிருட்சம் வீழச்செய் செல்வமே!
விருப்பொடு வெறுப்பில் பரமே!
வேண்டுவார் கலிநீக்கி யாண்டிடும் பொன்னிதியே!
வீறுடை மலர்ப்பா தனே!
சீரான குருவாகிச் சிறக்குமோர் புண்யனே!
சேவடி தந்தா ளுவாய்!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே! (9)

பொங்கிடுங்க டற்சென்னைப் புண்ணிய நகரோங்கும்
பொன்மயில் வாக னனே!
புலனாசை விட்டோர்க்கு நலமான யாவையும்
புரிந்தருள் சேவகனே!
தங்கியென் மனக்கோயில் தன்னிலே ஒளிரும்ஓம்
சரவண பவகு கனே!
தட்டாது மனவாக்கிற் கெட்டாது நிற்குமோர்
தற்பர மானவனே!
துங்கமே பெறுமுனது தங்கமார் சந்நிதியில்
தூயஉன் புகழ்சொல் லுவேன்!
தூங்காது தூங்கியே தாங்காத வினையாவும்
துரத்தியே மிகவெல் லுவேன்!
திங்களைய ணிந்தபெருஞ் சங்கரன்றன் மைந்தனே!
தெள்ளிய பதம்அ ருள்வாய்!
திடமலியும் வடபழநி யிடங்கொண்ட வேலனே!
சீலனே! உமைபா லனே! (10)

卐卐卐卐卐卐卐卐卐卐

# அருள்மிகு தேவராஜசுவாமி தேவத்தானம்

காஞ்சிபுரம் — 631 503



அசையாத திருத்தேரை
அசைக்கவே அழைக்கின்றோம்
அன்பான காணிக்கையை
அயராது அளித்திடுவீர்!
குன்றாத திருப்பணியைக்
குலையாது முடித்திடுவோம்!!
வற்றாத வரத்தினை
வழங்கும் நாயகனும்
வரதா உன் அருளை என்றும் அளித்திடுவாய்.

---

திருப்பணிக்கு அளிக்கப்படும் நன்கொடைக்கு வருமானவரி

உடனே அனுப்புங்கள்] விலக்கு உண்டு [உள்ளம் குளிருங்கள்

---

—: நன்கொடைகள் அனுப்பவேண்டிய முகவரி :—

செயலாளர் & பொருளாளர்,

அருள்மிகு தேவராஜசுவாமி தேவத்தானத் திருத்தேர் திருப்பணிக் குழு,

காஞ்சிபுரம்—631 503

பதிவு எண். எம். 7039



கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருவிண்ணகர் ஒப்பிலியப்பன் (வேங்கடாசலபதி) திருக்கோயிற் கோபுரம், மற்றும் புஷ்கரிணித் தோற்றம்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600 034.
ஆசிரியர் : ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
அச்சிடுவோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600 002.